உலகங்கண் முழுதாக னாளதென்ன வுளதா
யலகின்றி யழிவின்றி யறிவின்றி யமிர்தா
யெல்லையொன்று மறநின்ற பரவின்ப மிதிலே
நிலைநின்ற வவனின்ற நிலையென்று மழியான். 13

புன்மய கோசமுள் புக்கொ ளிக்குளே
நன்மைய தாகிய ஞானக் கண்ணினாற்
சின்மய மாய்த்திகழ் தேசை நோக்கிய
தன்மையால் வியோமநற் றாமங் காண்பரால். 14

அப்பரந் தன்னைத் தனபா லநுபவித் தநுப
வித்தா, ரெப்படிக் கண்டா ருள்ளத் திலங்குமா
முநிவ ரந்தச், செப்பரு மின்ப மாய்த்தன் றேசி
னாற் றிகழ்ந்து தன்னோ, டொப்பரு மவனே
யார்க்கு மும்பனென் றுணரப் பட்டான். 15

எங்குமுள னாயிறையா யேகனா யெல்லாப்பூ,
தங்கடொறு மறைந்திருக்குந் தன்மையனாய்ச்
சராசரங்கட், கிநுயிரா யுள்ளாகு மிறைவனொரு
வனையமறிந், தவகடைவார் சாந்தியினை யடைவ
ரல்லா தவரடையார். 16

முகமொடு கிரிவந்தன் முடிபத முடிவின்றாய்க்
குகைமுழு தினாநின்றே குறைவற வுலகெல்லா

மகமொடு புறமேவுற் றழிவறு நிலையாகும்
பகவனி லயலாகப் படுவதொர் பொருளின்றால்.

மாசுடை மாந்தர் தம்மின் மறைப்பதாய் மாசி லாத, தேசுடை யோகி கட்குந் தெரிந்திடப் படாத தான, வீசனு னெனதா ஞான மிப்படி யருளி னாலே, பேசின னுங்கட் கென்று பெருந் தகை யருளிச் செய்தான். 18

9. மாயா விகார அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் — 237.

## 10. தத்துவ தரிசந அத்தியாயம்.

திக்காங் குறியில்குறி ருக்கரு சனைதெரியி
லக்கணஞ் சகலவுல கத்தினங் குரமுமதவ்
வக்காம் பரமபத மப்பாலுஞ் சுடர்பிரம
னிரகுணம பரவெளியி னிச்சயம் பெறநிகழும். 1

ஒப்ப ரும்பர தத்துவத் தொப்பி டுஞ்சுரு திககலே, கப்ப றம்படி புத்தியிற் கற்பி தஙகள்க ழற்றிமெயத், தப்ப ருந்தவர் சிததமெய் தற்ப ரந்தனி லற்றதிங, கப்ப ரம்பிர மத்தினுக் கததை விஙகமெ னப்படும். 2

அறிவினிற் பிறிதெல்லா மறிவென லறி வாகும், பெறவரி திதிலல்லாற் பிறிதினில் வெளிகில்லேன், பிறவிய தறுஞாநம் பெறவரி ததனுலே, மறவிய துறுமாயா மயலல திலே யெல்லாம். 3

கின்மல மாகிகி ரஞ்சந மாய்வே
றின்மைய தாயவி காரமி தாமித்
தொன்மைய தாகிய சூக்கும ஞாந
மென்மல மில்லுரு வென்பா றிந்தோர். 4

யோகிகி லுளமென்பா லொருபடி யுறவைத்தே
யேகவெ னிலேகண்டா ரவரென தியல்கண்டார்
பாகம தறுமொன்றும் பலவுரு வமுநானே
யாகவு மெனேயன்பா லறிஞரு மயலன்றால். 5

பேறுறு பிரமாநந் தமுமது பெறுதாமும்
வேறுற வறிகின்று ரவர்விழி மறைகின்றார்

கூறற வவிகாரங் கூடிய விறைதாமா
பூறற வுணர்கின்றா ருண்மையை யுணர்கின்றார். 6

பங்கமில்சீர் பானுடைய தாதித்தன் பான்மை யினை, யிங்கொருவர்க் கறிவரிய தாகியதவ் வியத்தத்தை, யெங்குமுள தாய்த்தம்பா லிலங்கியபே ரின்பத்தைத், தங்களிலே நிலைபெற்ற சாந்தாடைந் திருப்பர்களால் 7

மெய்த்தக வீடிது விமல மாய்ப்பரி
சுத்தம தாகிநிர்த் தொந்த மாயொரு
பெத்தமில் பிரமரூ பத்திற் பேதியா
வுத்தம மெனதுசா யச்ச மென்பரால். 8

ஆதியு நடுவமந் தமுமி
றேதது வெனிற்பா மீச,
வீதிமி லெனையறி நிமல,
பேதமி லெனைப்பெறும் பிறவி பின்பெறான். 9

தபகனொளி பெருகிரவி சசியுடுமி னடையச், சிவனிகழ்வி னிகழ்வுபெற சிறிதுமிவர் நிகழா, ரவனுடைய வொளிகொடொரு வொளிதிகழு மசையா, விவனதொளி சிறிதுபெறி லிவர்நிகழ்வு பெறுவார். 10

உதியாம லென்று மொழியாமைநின்ற வொளி யாகி யென்று முள்தாய்த், திதியாய்நி றைந்து தெளிவாகி யங்கோர் செயலான தின்றி யருளான், மதியாளர் தங்க ளகமேய கண்ட வடிவாய்நி கழ்ந்த வடிவே, பதியாகி யென்று மழியாமை நின்ற படியாகி நின்ற பரனன். 11

சித்தம நந்த சிட்கள மின்ப சிமலஞ்சற்
சித்தமு தந்தற் சிவமெனும் வேதத திரளெல்லாஞ்
சத்தனே யர்தச் சருதியி னந்தத் துணிநெஞ்சத்
துததமர் தர்த முளமது ணர்ந்தா ரோமன்றே.

தாரா காயம பவநம்புத் தாநன லல்லனீ ராதார, ஞோரா தான பிராணாதி யெல்லா வாயுவி னுருவல்ல, ஞோரா காசன் மநம்புத்தி யுறுமொரு சேதந மவனலலன், பாரா காச யோகத்தில் கேவல ஞகும் பரமீசன். 13

எல்லாவே தத்துமறைந் திருப்பதுவா யாவர்க் குஞ், சொல்லாத பரஞாக முநகளுக்குச் சொன் னேனு; னல்லானிப் ப[illegible] ஞாநத்தா லேநலி

வொன், றில்லாத விடத் தடைவா னெனவியம்பி
யருளினான். 14

**10. தத்துவ தரிசந அத்தியாயம் முற்றிற்று.**

*ஆக விருத்தம் — 251.*

## 11. யோக அத்தியாயம்.

இடர்ப்படு பிறவி தீர்க்கு மியார்க்குமெட் டாத
தாகி, யுடைத்தன தொளியி னாலே யொளிர்வதா
டன்ன ஞாநச், சுடர்த்திரு வுருவ மான சொரூபனை
டாமெதான் றலே, கிடைத்திடு மந்த யோகங்
கேண்மினென் றருளிச் செய்தான். 1

போக வெறியோ ரிமைப்பிலே யாது வினையு
பேரிப்பதாக், தேக மொழியுமிம் முத்தியே சேரு
முணர்வு செகிப்பதா, மியோக முணர்வை யொ
ழித்தறு போக மொழிய வுணாச்சிதா, னாகு
தலவீ தளத்துளா ளிபாவ னயனை யளிப்பனான்

ஒருகா லிருகான் முககான்மற் றுள்ள கால
முன்னத்தை, வருகா தலினா லியோகத்தே வைப்

பார் மகேச ரெனப்படுவா, ரரிதா மிதனை மாயோக
மபாவ யோக மெனவறிஞ, ரிருபா லாக வியம்புவ
ரவ் விரண்டு மிருக்கும் படிகேண்மோ. 3

தானினையு மாறரிய தத்துவமி யாதொன்
றானிகழ்வ தாகுமத பாவமெனு மியோகம்
வானியல தாகியொரு வத்துவமி லாதாஞ்
சூநியம தாகவறி கின்றனர்க ளேயோர். 4

மயலிலா யாதிலொரு மலமிலா தானசக ல டி
வதா மாசி லொளியா, மயலிலா வேகவெனை
யயலெனு தேகமென வறிகைமா யோக மதுவா,
முயலுமா றுசையென முடிவிலா நூல்கள்பல
மொழியுமியோ காட வியெலா, மியலுறு தாமரிய
விதனிலோர் சோடசியு மிசையுறு தாகு மியல்
பால். 5

சுததமா யென்னைக் கண்டெத் தோற்றமுந்
தோன்று தான, வுத்தம யோக மெல்லா யோகி
லும் பரம யோக, மத்திற மின்றி யென்னை யாயிரங்
கோடி காலஞ், சித்தம தொருக்கி நாளுஞ்
சிந்தையிற் றிகழக் காணார். 6

மறைவினி லாகினும் வலியினி லாகினும்
பிறர்பொருள் வஃவுதல் பெரிய கள்ளமாங்
கறையுறு மரிவையர் திறங்க ளுவிலும்
பிறழ்வற மறப்பது பிரம சாரமாம். 11

அரங்கைதமுமூர் திடவாபத் தடைந்திடினு மன்பாலே, யிரங்கொருவ னீந்திடினு மோராமை யோராமை, வருந்திமனத் தாசையற மடக்குவான் மாசற்ற, கிரந்தரமா மியமமிவை நியமமினி நிகழ்த்திடுவாம் 12

படர்தவம் வேதநூல் பயிறல் பததியாற்
கடவுளை வழிபடல் கருதி நெஞ்சினே
டுடலுறு தூய்மைசந் தோட மோஙகிய
சடாமிகு நியமமாய்ச் சுருக்கச் சொல்வரால். 13

பவமார் நோவு கெடநோன்பு பலவா லாகலை மெலிவிகலை, தவமா குவது வேதாந்தஞ் சதருத் திரியந் தாரகமாஞ், சிவமா கியமந் திரம்பலவின் செபமத தியானஞ் சிறந்துள்ள, வவமா னதிலா வதன்பேத மறிவா ரறையும் படிகேண்மோ. 14

வாசிக முபாஞ்சு மாநத மென்று மதிலொ
ரொவ் வொன்றினுக் கொன்று, தேசுடைத்

தென்று செப்பினர் பிறர்கருத் தெரியவே செபித்திடுஞ் செபந்தான், வாசிக முபாஞ்சு வாயித முடித்தன் மாத்திர மாகத மடங்கி, யாசறச் சிந்தை செய்தலொன் றினுகொன் றுயிர மடங்குநல் லனவாம். 15

கூடின கொண்டலம் பாவங் கூடல்சந்
தோடமென் றறிஞராற் சொல்லப் பட்டதா
லாடுறு தூய்மைதா னகம்பு றம்புள
தோடம திரண்டையுந் துடைத்த லென்பரால். 16

தோயமு மண்ணுமாக கொண்டு சுத்தமாக்
காயமே வியமலக் கழுவப் பட்டதாம்
வாய்மைய முதலதா மாத்தி னற்செயுந்
தூய்மையை யுளதற் றூய்மை யென்பரால். 17

கந்தன் மலர்கொடு காய பூசனை
வந்தனை செயல்புகழ் வாசகின் பூசனை
பந்தனை பறமகம் பத்தி யாற்செயஞ்
சிந்தனை யியதமுஞ் சிவன்றன் பூசையே. 18

புராதகரோ நியவியம நியமங்கள் புகன்றன மேற், பிராணனதின் யாமமது பேசுபிரா ணையா

மம், விராவியுட னுறும்வாயு விளம்புவர்கள் பிரா ணனென, நிரோதகமே செயல்தனை நித்தலுமா யாமந்தான். 19

மந்த முத்தம மத்திம மென்றுமிங்
கந்த நல்லுயி ராமம றிபவர்
சந்த முற்றச கற்பவ கற்பமாய்ச்
சிந்தை யற்றிரண் டாகவுஞ் செப்பினர். 20

மந்த மாறிரு மாதிரை மத்திமோத் தமங்க, ளந்த வெல்லிரட் டிரண்டுடன் மாதிரை யடக்கல்; கந்த வேர்ப்புறுங கம்பநங் கிளம்புகை யிவையா, னந்த மாச்செய மொன்றினுக கொன்றநன் மையதாம். 21

அகற்ப மல்லதா மந்திர மகத்திலே யானவா யாமந்தான், சகற்ப மாம்வியா கிருதியோங் காரஞ்சா வித்திரி தனைமுக்கால், வகிககு மெல்லையா மிடம்வலம் வழங்கிய வாயுவை வலமாக, முககக வென்றறிந் தவரியோ கத்திலே முயன்றிட மொழிந்தாரால். 22

எசது ருமலி டத்தில்வ ழங்குகை
மாசது ருமல்வ லத்தினில் வாங்குகை

பாசத றத்திதி யாகவ டக்குகை
ரேசக பூரக கும்பக மென்றார். 23

இந்திய மீட்சி தானே யிசைந்திடும் பிரதயா
காரங், கந்தர மிதய நெற்றி கபாலநா பிகளி
லொன்றிற், சந்ததஞ் சிந்தை வைககத் தாரணை
தரித்த தேக, சிந்தனை யொழுங்கொன் றேடே
சேர்ந்தது தியான மாமே. 24

ஓதுமா லம்பந மொன்று மின்றியே
போதமும் போதகப் பொருளு மென்றுணர்
பேதம தன்றியே யிருந்த பெற்றிநற்
சாதந மாகிய சமாதி யென்பரால். 25

தாரணை யாடா மதத்திற் றகுதியன் னிரும
டங்காந், தாரணை தன்னிற் றியாநந் தானுமப்
படியே நன்றாந், தாரணி தன்னின் ஞான சாதந
மாஞ்ச மாதி, யோகணி தியாநந் தன்னி லேற்
றம்ப பரிசே யென்பர். 26

விவத்தி தம்பெற்றி ருக்கைவி ரைநதெழுங்
கவர்ந்தி தீர்வுறுக கற்பித்த வாதந
மவர்தி செல்லைய றைவரி தந்தநற்
சவத்தி கம்பத்ம மியாதினுந் துய்யவாம். 27

இருதுடை மேலே யீரடி யேறும்
பாமவி ருப்பது பதுமம தாகு
மொருபத மேலே யொருபதம் வைக்க
மருவவி ருப்பது மத்திம மாகும். 28

தடித்த வூருசா னுக்களின் சந்துற
மடித்த வந்தரத் துள்ளேம றையவைத்
தடித்த லங்கள்செவ் வேசெல வாங்குறத்
தொடுத்தி ருத்தல்சு வத்திக மாவதே. 29

வீரினாற் செழும்ப தானவவ் விடங்க ணெருப்
பினால் வெந்தவவ் விடஙக, ளூருசெங் துக்க
டுற்சார் துரால ருதிராந்திடு சருகுபற் றிடங்கள்,
கோரமாம் பயஙக ளுள்ளிட மிடிந்த கோயினாற்
சந்திகண் மயாந, மாரவா ரங்க ளுள்ளிட மசுத்த
மலககளு மநத்திலுக கதனால். 30

வருத்தமா டடல வாதைதையைப் பற்று மநமது
நடுநடுங கிட்டுப், பொருப்பினிற் குகைகள் புண்
ணிய தேசங் கோயில்க ளதிகளின கரைக,
ளிருப்பறு மனைதா னூர்வது கடிப்ப தின்றியே
காந்தமா யுள்ள, வொருததரு மறியா விடத்திலே
யென்னை யுன்னுவான் மநனெருப் படுவான். 31

உன்னரு மியோகொருப் படுவன் முன்னரே
யென்னருள் பெற்றயோ கீசர் தம்மையுஞ்
சென்னியால் விநாயகன் றனையுந் தேசிகன்
றன்னையு மென்னையும் வணங்கிச் சாருவான். 32

தனியி லிருந்து பயமின்றிச் சாந்த னாகித் தனக்
கிசைய, முனிவர் மொழியு மாதநங்கண் மூன்றி
னொன்றி லேழுக்கி, னுனியைச் சிறிதே கண்
விழித்து நோக்கி யாது நோக்காதே, யினிய
தன்பா லேயிருந்த வென்னைப் பாவிப் பதியோகம்.

பங்கயந் தலைக்கு மேலே பன்னிரு விரலிற்
கற்பித், தங்கதற் கறமென் மூல மறிவது நாள
மாகுந், தங்கிடுஞ் செல்வ மெட்டுத் தளமிறந்
தவள மாகு, மிகுதன் வல்லிவை ராக்ய மெனப்படு
நாதி தன்கண். 34

சகலசத் திபமு டைத்தாய்த் தமகிய மயமாய்த்
தாரம், புகலுமெய்ப் பொருளா யென்றும் பொன்
றாத தாகி யெங்குந், திகழொளித் திரளா யுள்ள
தெய்வமாய்த் தெரிகொ ணதாய், நிகழுதற்
பாத்தி னேரே நித்தலு நெஞ்சை வைப்பான. 35

மிக்கபரஞ் சுடரான விமலனையும் விளம்புற்ற, வக்கமலத் தேதனையு மயலாகா வுகைகினைவா, னககாமாம் பரமாகா சத்துவனைத் தானெங்கு, மொக்கினைக் தேபின்னை யொன்றகினை யாதொ ழிவான். 36

யாவரு மறிவரி தாய பாவனை
மேவுற விளம்பினன் வேறு மின்னமோர்
பாவனை கேண்மின்முன் பன்னு பங்கயப்
பூவினை யுன்னியப் பூவி னுள்ளதாம். 37

அங்கிய மறவங லோனைக் காட்டிய
பன்னிய புருடனும் பஞ்ச விஞ்சகன்
றன்னையே சகலகத் தாவாத் தன்னுரு
வுன்னியின் சிகையதா மதித்து நோக்குவான்.

அவமறு புருடன்ற னகமுற வறநன்றுச்
சிவமம லமதாகித திகழ்தரு பரமாங்மா
வுவமையில் பரனுமென் னுரையினி லுணருந்தத்
துவநிலை குலையாவச் சுதமென மநம்வைப்பான்.

அப்பா மாங்மா வுள்ளே யதனுக்கா தார மாகி, நிற்பதாய்ப் பரம மாகி நிரஞ்சந மாகி யுள்ளு

வொப்பரு மகேச னேக வுருவனா யன்னி யந்தத,
தற்பரந் தன்னோ டொன்றுந் தன்மைய னாகிச்
சார்வான். 40

சொன்னதத் துவங்க ளெல்லாஞ் சோதனை
பண்ணிப் பின்னைப், பிந்தத் துவமொன் றில்
லாப் பிரமமா னெனநி னைந்து, பன்னரு மோங்கா
ரத்தாற் பரமமாம் பரமா யுள்ள, வென்னிலே
தன்னை வைத்திங் கென்மய மாகி யுள்ளான். 41

கலங்கொள் ஞானநீ ராடிநல் லாகுதி
துலங்கு நீற்றையுத் தூளித்து மந்திர
மிலக்கு மங்கிமு தனினைத் தீசனைப்
புலங்கொள் சோதியின் புஞ்சமா யுன்னுவான். 42

ஆசிரம மேலிலதி யாசிரம மாகத்
தேசுதரு மாமறையி னீறுகடெ ரிந்தே
பாசுபத யோகுபசு பாசமற நேரே
பேசினனி தாருமறி யப்பெறும தன்றால். 43

பிறிதற மெனதுசா யுச்சம் பேறதா
மறைபொருள் கேவலம் வழங்கி டாரிது
வறமுய லந்தணர் தம்மி லன்பரிற்
றறவறு பிரமசா ரிகட்குஞ் சொல்லாம். 44

பரியும இஞ்சைப் பழிதீர் பிரம
சரியந்த வந்தரு சந்தோட முண்மை
யரியபொ றைதூய்மை யுண்டென்றி ருக்கை
யரியவி ரதத்துக் கங்கங்க ளாமால். 45

எண்ணிய விவற்றிலொன் றீ ரானவன்
றண்ணிய னாதலாற் றுன்ன முவினான்
புண்ணிய வினையினோர் பொருந்த வென்னையே
கண்ணிய விரதமெஞ் சாமற் கைக்கொள்வார்.

வசி லித்தவி யோகாலெ லையடைந்
தாசை கோபம்ப யமற்ற வாங்மராய்ப்
பாச மற்றெனைப் பாவித்த பாவத்தா
லாசி லென்மய மானார னேகரால். 47

எப்படி யார்நினைந் தடைவ ரியானவர்க்
கப்படி யானிகழ்ந் திடுவ னாதலா
லொப்பரு ஞானமெய் யோகு ளத்தெனைத
தப்பரும் பூசனை செயவே தக்கதாம். 48

பொய்யில் பததி யாற்றுறவாற் போதம் பொருந்தும் புந்தியினாற், செய்யும் பூசை யேபூசை செய்யுந் தொழில்க ளெல்லாம்விட், டய்யம்

பண்ணி யண்டொன்று மாசைப் படாதா ரெனை
யுடைய, முய்யும் பரிசு மறைந்த பொரு ளுங்கட்
கிரங்கி யுரைத்தனனால். 49

பத்திமையென் பாலுடையா னெவ்வுயிர்க்கும்
பரிவுடையா, னைதநலந் தீங்கடையா னெடுவ்
கிடவன் ளமதுடையான், புத்திமன மென்பாலே
பொருந்தியபா வனையுடையா, னைத்தனையும்
பொறையுடையா னியாவரினு மெனக்கினியான்.

பன்னியவோ கொழிவில்லான் பற்றிலான்
பாவகத்தோ, ரின்னலிலா னாரம்பித் திடுவதூஉ
மொழிவதிலான், றன்னைவெரு வதலொனருற்
றன்வெருவ றனில்லா, னென்னதியா னென
வில்லா னென்றுமெ னக்கினியான். 51

துயரு றுதசந் தோட மேவியே
செயலெ லாமுதா சீந னாகியே
யயல ராயினு ரன்ப ரின்றிவா
ழியல்பி னானெனக் கினிய னாயினான். 52

துதியி னிந்தையிற் றுல்லிய னாயெனிற்
றிதிய டைந்துசி னஞ்செருக் கின்றியே

மதியி னொன்றினும் வாஞ்சையு றாதுள
வதிக வானெனக் கென்றுமெய் யன்பினான். 53

வாடலின் முகமது மலர்ச்சியு மவுநநற்
பீடுறு வித்தகம் பெற்ற தோடலங்
கூடுத லினியவை கூறலி யாவரு
நாடரு நிலையுடை யவர்க்கு நல்லனான். 54

எத்தொழில்க ளுஞ்செயினு மென்னருளி
னாலென், பத்தர்பர மப்பதம டைந்திடுவ ராலே,
தத்துவமும் வைத்தெனிலெ னைச்சரண மாக,
நித்தமுநி ராசையைய டைந்துநினை கிற்பார். 55

அடங்கு மனனாய்ப் பயனொன்றி லாசைப் படாதா
னளவற்ற, விடங்கொள் வினைகள் செய்தாலும்
வீடே யெய்து மாதவினா, லுடம்பு காணா நல்
யோகி யுண்டாம் வினையா லொருகாலு, மிடும்பை
யடையா னாசைப்பா டில்லா னெனையே யடைந்
திடுமால். 56

துற்றுவரு தொந்துவம யக்கவைது டைத்துப்
பெற்றதொட மைந்தெனருள் பேறுறநி னைந்தே
யுற்றகரு மங்க          யென்னவுரை செய்யா
கற்றவர்கள்          வேகருது கின்றார். 57

என்னை யேநினைந் தெனைப்பணிந் தெனையருச் சித்தென், றன்னை யேயறிந் தவனெனை யன்றியே சாரான், பின்னி யாதுமப் பெருந்தகை யிருந் திடந் தனிலென், சென்னி யாற்சுமந் தவற்கு வேண் டுவ துசெய் குவனால். 58

எர்ப்ப தத்தைவிட் டிதரதே வதைகளைக் காமித், திஷ்டம் வேண்டுநா தாமுமிங் கிதனை பெய் துவரா, லன்பி னுலருண் மூர்த்திவேண் டுநாகளு மவர்பாற், பின்பு வந்தெனை யறிந்துநன் முத்தியே பெறுவார். 59

சாமவே தோதக கடவுள ருஞ்சா வில்லாதென், னுமைய தாயவன் றென்னையோ ழிந்தார் தமை விட்டவன், பாமக வாதிக சுற்றமும் விட்டெடன் டாவன்பர, யாமர ஞோர்தத் தளவுமி லிங்கத் தருச்சிப்பான். 60

எந்தப் பதமுங் காதவி லாதே லிங்கத்தே
ஏந்திப் பவன்ஞா னாத்மக மாகி மயலற்றோன்
சிந்தைக் குளதா யெகுந் தானுஞ் சிவலிங்க
மர்தச் செசகந் தனிலே யறிவா லடைகின்றான்.

பக்கமில் பகுதி யோடுமற் றெவரும் பாவனை யாலிலிங் கத்தே, யிங்கெனை யிறைஞ்சி யின்ப

மெய்ஞ் ஞான மெங்குமா மிலிங்கமெய் துவாரா, லஙகியிற் புனலி லம்பரந் தன்னி லருக்கனி லநி லனிந் தவினி, லிஙகிவை யிலிங்க மாரணு தியிலே யெனைனைத் திறைஞ்சிடப் படுவான். 62

ஈதெ லாம்வெறும் லிங்கம யமதா
மீதெ லாமிலிங் கத்துளி ருப்பதா
மாத லாலந்த லிங்கமெங் கேயங்கே
காத லாற்றொழ வேகட னுகுமால். 63

கருத்திலா மூடர் காட்டமா திகளிற் காண் பர்கற் றவர்களா காயத், தருக்கனிற் புனலிற் காண்பரா குதியி லருச்சனை செய்யுமந் தணரவ், வெரிககணே காண்ப ரெங்குமாய் நின்ற வெனா து லிங் கத்தினை நேரே, யொருக்கிய பரம யோகிக ளென்று மொழிவறக காண்பர்தம் முளத்தே.

நீங்காத காதலினு னின்மலபோ தம்பயக்கு மோங்கார மாதலினல் லுருத்திரியர் தானுதல் பாங்காக வததிபக வானுகிப் பரித்தவுடல் போங்காலத தளவீரந் தரயோகம் புரிந்திடுவான்.

காமர மெங்குங் காமா கன்ருர் காசிக்கே, யாமர ணுந்தத் தளவுமி ருப்பா ரங்காவி, போமள

வற்றார் போய்வா வற்றார் புறையற்றோர், காமமை வென்றார் தாமரை வென்றார் கழல்கண்டே.

பொல்லா தவரு மங்காவி போகி லென்னை விடப்போகார், நல்லா ரென்னை யடைவரென நவில வேண்டு வதுமுண்டோ, வெல்லா வுயிர்க்கும் வீடளிப்ப னென்றால் வினையா விரங்காத, வல்லா வகைகூ டினுமுயிர்விட் டகல்வா னல்ல னறிவுடையான். 67

அரிய மறையி லரியமறை யாகும் பொருளீ தறிஞர்களாற், றெரிய வினைந்த படியெவர்க்குஞ் செப்பப் படாது செய்தவத்தா, லுரிய விரத முய றமற் றொடுவகு முள்ளத் தொடுபிரம, சரிய முடைய பத்தனுக்கு நேரே சாற்றத் தகுவதுவாம். 68

இவணமே தனதி யோக மியம்பித்தன் னிடத்திருந்த, வுவணகே தனனை நோக்கி யுத்தமர்க் குரைத்த யோக, மிவணுரை செய்யத் தக்க திலக்கிய சாந்தி நெஞ்சிற், சிவணிய புதல்வர்க் கென்றே சிவனருள் செய்ய லுற்றான். 69

முனிவரே யுங்கட் கெல்லா மொழிந்திடப் பட்ட ஞானம், புனிதராய்ப் புதல்வர்க் காகப் பூசர ரானோர் கேட்ப, வினியநும் வாயி னாலே யிப்படி யிறப்பு மீண்டு, செகியமு மொழிய நீருஞ் செப்பு மென் றருளிச் செய்தான். 70

இந்த நாரண னீச னாகிய வென்னில் வேறல னென்றுதஞ், சிந்தை யானினை வார்க ளாகவுரை செய்த யோகிது செப்பலா, மெந்த வாருயிர் கட்கு மின்னுயி ராகு நாரண னென்பதோ, ரந்த மாதியி லாவெ னககரு ளான தோர்வடி வாகு மால். 71

எதமுற நாரணனை யென்னிலயல் காணும்
பேதவிழி யாளர்பிற விப்பிணிய ருரே
மாதவனை யானெனம நத்தினினை கிற்கும்
போதவிழி யாளர்பரி பூரணம டைந்தார். 72

ஆதலில ருச்சிமினிவ் வாதியரி யானாய்க்
காதலொடு காண்மின்மய லாகியயல் காண்பார்
தீதுதரு மாநரகு சேர்வறுவர் தீதா
நீதியுறு நீசரிடை யானும்வெளி நில்லேன். 73

நான்மறை யந்தணர் நாய்வதை செய்தத
[illegible]ர்மிசை கின்றவ ரோதினர் மூடப்
பான்மைய ரும்மரி யைப்பழி யாதம்
மேன்மைசெய் பத்தரை வீடுறு விப்பன். 74

மருவற் றென்னை மகம்வைததோன் மாலா மிகவினன் வடிவென்றே, பாவிப் பணிவா னென் றேசெம் பவளத்திருவாய் மலர்ந்தருளி, யாவிற் றுயிலச் சுதனுக மழுந்தத் தழுவ வவ்விடததே, சாவற் றருள வதிசயமாய்க கண்டார் மேனி கண்டிலரால். 75

தற்ப ராபர மாகிய வடிவினைத் தவிர்ந்தொரு தகனுகி, முன்ப தோன்றிய வடிவதாய் முகுந்தனு முங்கனை முகநோக்கித, துன்ப வேற வருளினு னுமக்கிறை சொன்னவிச் சுடர்ஞான, மன்ப ராயற மற்புதல் வர்க்கறி வியுமென வருள்செய்தான்.

ஈசன தாய வந்த திலங்கிய பரம ஞான, மாசிலந் தனனு மாகி *பாகித வசல னகி, நேசனு யடங்கி யுள்ள நெஞ்சனு கமல னுக்குப், பேசலா மென்று கண்ணன் பின்னரு மருளிச் செய்தான். 77

* ஆகித அசலன்-அசகித கோததிர முள்ளவன்.

யோகிக ளியாவ ருக்கு முத்தம யோகி தானே, யாகிய முகுந்த னிவ்வா றருளியங் கவரை நீங்க, வேகவீ சனையு நாரா யணனையு மிறைஞ்சி யெல்லா, மோகவே தனையு மாறி முனிவர்முற் பதிய டைந்தார். 78

சனற்கு மாரன்சம் வத்தகற் குரைத்தனன் சநந்தனன் புலகற்குப், புனிற்றி நீர்முனி கௌ தமன் பொருட்டிது பகன்றனன் பகன்றனிக, கதித்த மற்றுள விதுபரத் துவாசனுக் கஙகிரா வளித்தானோர், செசிப்பி லாவிது கபிலமா முனி பஞ்ச சிகற்குரைத் தனன்முன்னே. 79

எந்தை யாகிய பராசரன் சநகனு விலங்கிடப் பெற்றனென், தந்தை பாலருந் தவஞ்செய்வான் மீகியந் தானறிந் திடப்பெற்று, னந்த கோபனன் மனையினின் மதலையாய் நடித்தநா ரணன்குந்தி, மைந்த னாகிய பார்த்தனுக கருளினன் வழங் கினன மான்றேர்மேல். 80

ஏம மாகவெ னககிது ருததிர
வாம தேவன்வ ழஙகின னுதலாற்
காம னீமெறழக காய்ந்தவக கண்ணுத
ருாம மேசா ஞகத்த ருவதே. 81

வேருக நானிந்த வெம்பிறவி வேரறுப்பா, னேருளு மிறையவனே யென்றவனே யடைகின் றேன், மாருத வன்போடு மனேமக்கள் கிளேயொடுநீ, ராருருஞ் சடைமுடியா னடியடைமி னிதுவேண்டில். 82

ஒழியாது நற்கரும யோகத்தா லுருத்திரனே, வழிபாடு செய்யுமென மாமுனிவன் மறைப்பொருளே, மொழிவானே நேராயம் முககணிறை யெனமுனிவர், கழிகாத லொடுபணிந்து கைதொழுது களிகூர்ந்து. 83

ஒதம் பற்றியோ குணர்ந்துறங் கமலநீ யுன்திருவருளாலே, போதம் பெற்றவா னவர்களும் பெரலரும் புராணபூ ரணன்செம்பொற், பாதம் பற்றியப் பவககடல் கடககநற் பத்திபெற் றனமாற்று, லேதும் பெற்றனம் பெருதசொன் றில்லையென் றிணையடி பணிவுற்ருர். 84

தீதின் முதகியைச் சேரவேண் டினர்சிவனடிக்கே, யாதி லர்ச்சனே செய்தன ரந்தவெல் லேயிலாப், போத முற்றநற் கருமயோ கினேப்பதல் வர்களா, யாத ரிப்பவர்க குரைமினென் றருண்முனி பணித்தான். 85

*மாமறையின் மெய்ப்பொருளை மாலொடுச*
*நற்கு மாரன்முத வார்ககிறைவ ழங்குதிரு வார்த்*
*தை, யாமைவடி வைககொடரி யமுதமத நத்தன்*
*றருமுனிவர் கட்கருளு மறிவதனை யன்பாற்,*
*றுமதமில் சௌநகனை யாதிமுனி வர்கருத் தந்த*
*ருளு கென்றுதலை யாலுறவ ணங்கித், தோமின்*
*முனி சூதனுரை செய்யவவர் கட்குச் சுருதிகடெ*
*ரிந்தமுனி சொன்னபரி சீதால்.* 86

*மூவர் தேடிறைச நற்கு மாரன்முதன் முனிவர்*
*கட்குமொழி கீதையிங், கியாவ ரோதினரி தன்*
*பொ ருட்டுணிவ ரியாவர் கேட்பவரி யாவர்தம்,*
*பாவம் வேரொடுப றிந்து நல்லபா மப்பதம்*
*பெறுவ ராதலான், மேவு மன்பினொடு மோத*
*மீளுதலில் வீடு வேண்டினன்வி ரும்புவான்.* 87

11. யோக அத்தியாயம் முற்றுப் பெற்றது.

*ஆக விருத்தம்* — 338.

சிவப் பிரகாசம் என்னும்

ஈஸ்வர கீதை முற்றுப் பெற்றது.

சர்வஞ் சிந்மயம்.

உ

சிவமயம்.

# ஈஸ்வர கீதை பாட்டு 338-க்கு முதற் குறிப் பகராதி.

ஈஸ்வர கீதை பாட்டு முதற் குறிப் பகராதி
முற்றுப் பெற்றது.

அத்தியாயம் 11-க்கு. பாட்டு 338. 59 எழுத்து.

திருப் பூ வணை மடாதிபதி, சத சாஸ்திர கர்த்தா,

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன.**

| | | | |
|---|---|---|---|
| 1. | விசார சாகரம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு | ரூ. | 2—4 |
| 2. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். | ,, | 2—8 |
| 3. | கதா சரித் சாகரம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு | | 2—4 |
| 4. | நைஷ்க் கர்ம்ய சித்தி. வசநம். | ,, | 0—8 |
| 5. | வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம். | ,, | 0—8 |
| 6. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். | ,, | 0—8 |
| 7. | வேதாந்த பரிபாஷை. வசநம். | ,, | 0—7 |
| 8. | ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். | ,, | 0—4 |
| 9. | மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜயோக பாஷ்யம். | ,, | 0—4 |
| 10. | ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம். வசநம். | ,, | 0—4 |
| 11. | வேதாந்த சஞ்ஞா. வசநம். | ,, | 0—2 |
| 12. | ஹரி மீடே-ஹரி தத்வ முக்தாவலி. வசநம். | ,, | 0-12 |
| 13. | நாநா ஜீவ வாதக்கட்டளை-சத்யார்த்தப் பிரகாசிகை உரை | | 2—0 |
| 14. | கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை. | | 2—0 |
| 15. | மகாராஜத் துறவு - மகப்பிரசாதிநி உரை. | | 2—0 |
| 16. | சீடாசாரம் - பால போதிநி உரை. | | 0—8 |

ஓம்.

பரப் பிரஹ்மணே நம:

சம்ஸ்கிருதத்தில்

ஸ்ரீ வியாச பகவான் அருளிச் செய்த

(பரமார்த்த தரிசநம்)

# பகவற் கீதை.



இது

சேம நகர், ஸ்ரீ பட்டஞரவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு

திருப் பூ வண மடாதிபதி

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளால்**

பரிசோதிக்கப் பெற்று

தலைபபுக் கவி —

பாட்டு முதற் குறிப்பு அகராதியோடு,

மதுரை

ராஜேஸ்வரி பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

 **1953.** [விலை ரூபா. **1-4-0**

# முகவுரை.

உலக மாந்தர் உஜ்ஜீவிக்கும் பொருட்டு, ஸ்ரீ வியாச பகவான் தர்ம புத்திரர் முதலியவர்களின் சரிதத்தை பாரதம் எனப் பெயர் புனைந்து ஒரு லக்ஷம் சுலோகத்தில் பதினெட்டுப் பர்வமாக இயற்றினர். அதன்கண் யுத்த சமயத்தில், கிருஷ்ண அர்ஜ்ஜுன சம்வாதமாக எழு நூறு சுலோகத்தில் பதினெட்டு அத்தியாயத்தில் பகவற் கீதை என ஒரு நூல் தோன்றிற்று. அது கர்மம் - பகதி - ஞானங்களைத் தெளிவாகக் கூறுகின்றது. அந்தப் பகவற் கீதையின்கண் உபநிஷத் மந்திரங்கள் நேராகவும், சில எழுத்துக்கள் மாற்றப்பட்டும் வைக்கப்பட்டிருக்கின்றன. அதனால், இதனை வேதம் என்றும், உபநிஷத் என்றும், ஸ்மிருதி என்றும், அலங்கரித்துக கூறுகின்றனர்.

இதனைச் சேம நகர் பட்டரவர்கள் எழு நூறு சுலோகங்களையும் தமிழில் 545 செய்யுளில் மொழி பெயர்த்தனர்.

இத் தமிழ் கவிக்கு, அருணாசல முதலியார் என்பவர் ஓர் உரையும், சிதம்பரம் — பொன்னம் பல ஞாந தேசிக ஸ்வாமிகள் அவர்கள் கூடார்த்த தீபிகை என ஓர் உரையும், இயற்றியிருக்கின்றார் கள்.

இக் கவியை மட்டும் படிப்பவர்கட்கு உபகார மாக, டபிள் கிரௌன் 1—32 பேஜ் சைசில் சிறி தாக பாக்கட்டில் வைததுக கொள்ளும்படி யாக அச்சிட்டிருககின்றோம்.

சம்ஸ்கிருத எழு நூறு சுலோகத்திற்கு பதப் பொருளும் எழுதி ஆங் காங்கு தமிழ்க கவியையும், உரையையும், இணை தது ஒன் றாக ஓர் புத்தகம் அச் சிடுகின்றோம். படிப்பவர்கட்கு இரு பாஷை அறி வும் ஒருங்கே உணர உபகார மாகும் பொருட்டு விரைவில் வெளிவரும்.

திருப் பூ வணம், வேதாந்த மடம்.

| எண். | அத்யாயப் பெயர். | சுலோகம். | கவி. |
|---|---|---|---|
| | பாயிரம் | 0 | 4 |
| 1. | சோக அத்தியாயம் | 47 | 26 |
| 2. | சாங்கிய யோக அத்தியாயம் | 72 | 60 |
| 3. | கர்ம யோக அத்தியாயம் | 43 | 26 |
| 4. | சம்பிரதாய அத்தியாயம் | 42 | 31 |
| 5. | ஞான கர்ம அத்தியாயம் | 29 | 19 |
| 6. | யோக அத்தியாயம் | 47 | 37 |
| 7. | மாயா ரூப அத்தியாயம் | 30 | 25 |
| 8. | எழு வகை வினை உரைத்த அத்தியாயம் | 28 | 18 |
| 9. | மாயா விகார அத்தியாயம் | 34 | 23 |
| 10. | விபூதி யோக அத்தியாயம் | 42 | 26 |
| 11. | விசுவ ரூப அத்தியாயம் | 55 | 43 |
| 12. | பக்தி யோக அத்தியாயம் | 20 | 12 |
| 13. | க்ஷேத்ர க்ஷேத்ராஞ்ஞ விபாக யோக அத்தியாயம் | 34 | 31 |
| 14. | குணாதீத அத்தியாயம் | 27 | 23 |
| 15. | பிரபஞ்ச அத்தியாயம் | 20 | 25 |
| 16. | தேவாசுர சம்பத்து விபாக அத்தியாயம் | 24 | 21 |
| 17. | குண விகார அத்தியாயம் | 28 | 25 |
| 18. | சங்க்ஷேப அத்தியாயம் | 78 | 70 |
| | ஆக சுலோகம்-கவி | 700 | 545 |

உ

சிவமயம்.

# ஸ்ரீ பகவற் கீதை

## கவி 545-க்குத் தலைப்புக் கவி-8.

## பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்

1. எய்-பாயி ரம்-சோகம் ஐவ-மன் விண்-
உன்-புண் போர்-வீம கங்கை அன்றி, எய்-மேல்-
வஞ் ஆர்-வைய தரு-ஒன்ற யாவர்-விள தாவி-தீ
தறு-வாய் ஓதல், இய்-அரச ஆன-கொற் குல-
தடு-வா ரா-மின்-கொல் முப்பது-சாங் கியம றுப
தாம், இவ்-ஆயா ஒவ்-மாற்ற தவர்-ஆத உஞ்சே-
மன் நெய-பின்னை சாவ அன்ன, பிய்-மாயு
பொன்-அன்ன இவ்-சீத மண்-வையா யான்-
அழி-இல் ஊறு நில்லா, பீறி-உரு எல்-வீவர்
செறி-ஒருவ தித-செய்தி ஆவ-அன் இன்று துற்ற,
அய்-கதவி அரி-தெளி-புண நவை-குளமு அறி-
விடல தரு-பேதை தலை-இவ் அறிவி, ஆமை-
குறை ஆதல்-எரி வேண்டல்-அடுத் தல்-ஆறு
யாதொருபொ நீரின் யான்-பின்.

2. பின்-மூன்ற வது-கருமம் அலை-நன்றே
ஆதி-ஒரு வரு-புலன தேவா செயல்வ, பேர்-
மற்ற உளவாமு இதனு-கண் ஆதலால் பெரிய

வர்ப என்-சே பல்-மெய, கள்-என்பா பண்டு
செய அஞ்ச-பல தடு-மாய தீம-எவ் வகை-நெ
ருப்பை, காதலால் ஆற்ற-மேல் இருபதா ரும்-
பின்-நான் காலதே சம்ப்ர தாயம், சென்-நற்ற
எவம-கரு தரு-நல்ல ஞாநமா சொலலார்-சா
ஏதா இவ்வ, செய லாலும் உய்யும்ப ஓடு-செயன்
மேல்-ஆவ தென்-எண்-அ டைகு பெற்ற, தோன்-
விட்டு ாமமா அறிவ-உந் நிய-தேடி மிகமேனி
இன்ன இப்ப, தொன்மை-விழி அதனுல்வ எறி
யா-தி நர்-சொல்ல அறியாமை முப்ப தொன்றே.

3. ஒன்றைந்நா வதுஞாந கருமம் - பூத்
தருளிமொரு கருமாந் திறவு பெருமை, ஒரு-
வினைமு கவைதரும் காணும்-டா ரெவ்வினையும்
உடன்-அன்ப இவ்வ அறிவி, நன்றேஞா னம்-
இகம் உடம்பு-மெய் யறி-காவல் அஞ்சுபொறி
சாதி புரிடும், நாடு-பத் தோன்பதே ஆறவ தாம்
யோகம் போகம்-செய் மேவி உய்வ, என்-
பன்மை தான-இற பாடும்ப கைம்மாறி தலையாமி
ஒக்கு தலையும், எண்டி - துயில் இப்பரிசு யா
தொன்றி வஞ்சர்வேல் போகமாய் வாகுகி தேறு,
முன்-இழியா யாவனொரு இடான எல்லாவு

இவ்வ-வெய் என்று யோகம், மையல்-பொய் யோக-சிற கொண்-அனைய நீடு-எல் லா-, வ முப்ப தேழே.

4. ஏழாவ தாம்-மாயா ரூபம்-உய் மாயு-மண் கண்-வேத திரி-ஆன் மூன்-மைக், இவ்வ-ஊ ழா-செல்வம் இன்ன-ஓ தரு-விரிய மற்றயா வன்-அளித்த, ஈழ்-சிந்தை தானந்த மருவு-போ னவை-வியக் எறி-தேடும இருப தைந்தாம், எட்டாவ தாம் எழுவி ஞ-அடைய ஆய-விரி அந்த-எஞ் இந்த நல்ல, ஆழ்-எல்-மரு யாதொன்-அஞ் ஓதல்-இப் செய்-நெறி-எப் அங்கி-எ தம்பதி னெட்டு, ஆர்-ஒன்ப தாவது மாயாவி காரம்-ஈர் அறை-அழி யாரு முன்-என், ஞாழ்-ஈண் விலங-ஊர்வ அறிவிலை கால-வே தம்-ஆயில் எல்லா தாங்கி, ஞாநமா மின் - தேவ போத - எப் பொருள்-ஊனே வணி-மின்-இரு பத்து மூன்றே.

5. பத்தாவ தவி-பூதி அரி-தேவ புத்-எனே-இப் கிர-மற்ற பேத எல்-மெய், பருகா-இ றந்த வென் ஓதிற்பெ சந்திரஞ மலே-பெருமு சித்த படைகள, வித்-வருண னும்-பொரா மிக்கு-

பெண் கல்-கண்ண இரும்பு-பல இருப தாரும், விசவரூ பம் - பதினெ ராவதாம் சுருள்-தெரியா எண்-மரு-என் அகரு எப்வ, வத்-அவ்வ மண்-தேவ கண்களும் இந்தவரு என்று-வலம் நில-வணங்க, உானடைய நஞ்சமிவ் நூற்றுவர் ஓத-ஒளி என்ற-இறம் இவ்வ ஞாக, எத்-கையும் ஆதி-வப் என்-தேவ கீதிவே சாயைபோல் வறு யாத, என்னு-உண் உண்டாய அறி-பண்-என் தேவ-இப் கண்ட-காற் பத்து மூன்றும்.

6. ஆய்பனிரண் டாம்பக்தி வய-மன் உரை-கார டாவர்-மெப் அதகி இருவ, ஆர்-உலக ஒன்றி-இகழ் பன்னிரண டே-பன்மூன் ருவது க்ஷேத்தி ரக்ஞ, ஒய்விடம் உட-மன்ன மற்றி-எப் பொருளி-கா தவில்-இற்றி மான பெற்ற, ஒருபெரும் முன்-ஆதி காணும்பு பூத-அரு ஆன-என் ஓதி ரண்ணி, ஈய்-இவ்வ உண்ப-இப் படி-செறிய இருமையும் போவ-கெடு ஒத்து உணர்-உன், இா-ஓரின் முப்பததொான் ரும்பன்னென் சாவதி குணைநிதம் செல்-கல் இன்ன, தாய்-மூத இந்த-வன் சத்து-பற் ஓது-குறி உரை-வாழு

ஒத்து தக்க, தககசத் அரு-சத்து உட-கண்-வாய்
தொழில்-மான இப்ப-ஒழி இருபான் மூன்றே.

7. ஏ-பதினெண் தாவ(து)பிர பஞ்சம்-சா யை-
வேர்-இப் ஊழ்-கரு-மற் றிப்-கண் செறியால்,
ஏர்-கனவு மந்திர-தன் குட-பூக்க மின்-இந்தி
மூர்(து)-தின்-நல் அசைவி மருவு, ஆப-மொழி
இவை-இந்த வேத-கண இருபத்தைந் தாம்-
பன்று ரூவ(து)தேவ, அசாசம் பத்து-மற தெய்-
அஞ்ச மறை-திருவ தினை-என் விரும்ப நிறைவி,
பாப-இற இப்-இனம் தொட-விய-மன் மற்-இவ்-
ஒரு காதல்-கூ ஆதல் மூவேழ், பதினேழா வது
குணவி காரம்-உண் வேத-யா வர்-சாத்து அட-
உண் சதது, மூப-இப் ஆசி-செய நூற்-தீகு
தீர்த்த-தெளி தலை-தீத்த வசைசி பேதை, முன்-
கொண்-வா டா-ஒப்ப ஓமென்னின் ஓமென்று
காதல்-இரு பத்தைந் தாவகாலா.

8. காலா-பதினெட் டாவது-சக் கேஷபம்-ஏ
கம்-சன்னி காமமென் தீதகி ஞாத, கார்-என்ன
நித்த-மெய் யாதி-யாக இன்ன-ஒங் இரு-வாக்-இவ்

யாவன் அறிவ, சான்-ஆன்ற நன்றாய்-ஊனப்-
வீதல் குலை-பற்று வினை-தினை மனமொ ஈணம்,
தருமம்பா பாவ-மனம் பண்-துன்பம் பொரு-
தொடரு இந்தவிடற் கறைசெய் தலைமை, ஆண்-
உழுதொ தீராவ அல்லாவி கனை - வெல்ல
சொன்னகர காடு சொன்ன, அந்தவுரு என்னப்ப
ஒற்றி-விரை பொறி-வேற தீதகலா என்னை
இருவே, மான்-மற்று எல்லாப்பொ எய-என்
மன்-வைய பையாவி அணி-பி ணித்த, மாத-அப்
பொரு-எஞ்ச திரு-என்ற வேதநூல் ஆற்றியல்
எழுப தாமே.

முற்று.

உ

ஸ்ரீ கிருஷ்ணாய பரப் பிரஹ்மணே நம:



# பகவற் கீதை

## ஸ்துதிகள்.

பாதியோர் பெண்மையான் பரிந்து பெற்ற
தோர், சோதியாங் களிற்றினைத் தூர மண்மை
யிற், பேதியா துளம்பெறப் பேணிப் பாகவற்,
கீதையான் மொழிகுவன் ஞாநக கிட்டவே. 1

அரியயனோ டரனாகி யகிலந் தன்னை யாக்கி
யளித் தழிக்கின்ற வவித்தைக கென்றாங், கரியது
வாய்க் காந்தத்தி னிரும்ப போலக் காரணத்தின்
சலநத்துக கேது வாகி, வரியமரு மரவணைமே
னொளிய வேறி வைகுண்டத் தினிதமரு மா

யோன் மண்மேற், பரிபணரு மணிநெடுந்தேர்ப் பார்த்தற் கூர்ந்த பாண்டவர்கள் சாரதிநாம் பரகேர் தெய்வம். 2

ஒருபத மடித்தொரு பதம்பொற் றேர்மிதித், தொருகையிற் குசைகசை பொருகை ஞான மாய்ப், பொருகையில் விசயனைப் புரிந்து நோக்கி மெய், தருபொரு ளுரைத்தவர் சரணம் போற்று வாம் 3

## ஆக்கியோன் பெயர்.

சேடமா மதுரை யின்றுஞ் சேமமா நகரந் தேடி, யாபஞர் பட்ட ஞரா யவதரித் தருளி ஞலே, போயகாண் மொழிந்த கீதை புலப்படுத் ததுவ மன்றித், தூயமா தவர்க்கு மிந்தச் சுருதிநூ றொடங்கி ஞரே. 4

உ

பரமாத்மனே நம:



# பகவற் கீதை.

## பாயிரம்.

ஐவகைப் பொருளு நான்கு காரணமுங் குணங்
கண மூன்றுஞ், செய்வினை யிரண்டு மொன்றி
யாவருந் திகைப்ப நின்ற, பொய்யிரு ளகல
ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள், கைவள
ராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப்
பாம். 1

மன்னருள விசயன் கேட்ப வாளம ரதன்மே
விட்டு, மின்னவிர் படைக்கை மாய னுரைத்த
மெய்ப் பொருளை யெல்லாம், பன்னரு மறைகள்
கோத்த பழமுனி பணித்த வண்ண, மென்னறி
வளவி னாலே தமிழினா லியம்ப லுற்றேன், 2

விண்ணியன் மொழியி     வியாதன் கூறிய,
புண்ணிய கதையைநீ புகல்வ
லெண்ணிய வகைபிறி தில்லை யாருமிந், நுண்
ணிய பொருளிலே நுழைய வேண்டியே. 3

உன்னு நான்மறை மால்வரை யுச்சிமேன்
மன்னு மேகமு ழக்கிய வாக்கினைப்
பன்னு சீர்ப்பர மார்த்த தரிசந
மென்னு நாமத்தி தனையி யம்புவாம். 4





# 1. அர்ச்சுனன் சோக அத்தியாயம்.

---

புண்ணிய பூமி யென்று புகழ்குரு பூமி தன்னி, லெண்ணிய பின்னை நண்ணு தவர்களு நமரு மாங்குக், கண்ணிய தெதனை யென்று கண்ணிலா வாசன் கேட்பத், தண்ணிய வினிய சொல்லாற் சஞ்சய னுரைக்க லுற்றான். 1

போர்முக மாகி நின்ற புல்லலர் படையைப் பார்த்துக, கார்முக வழவ னாய கலைமறை யவனை நோக்கி, வார்முர சதிருந் தானை வாளர வுயர்த்த தோன்ற, லோமுகின் முழக்க மென்ன வின்னண மியம்பு மன்றே. 2

வீமனையும் விசயனையு நிகர்தருபோர் வில்லாள, ரேர்மருவு சிலையபிம னுள்ளிட்டா ரெனப்பலருந், தாரமருவு தலைவர்களாய்த் தலைப்பெய்த தானை யினை, மாமருவு பெருந்தேரோய் பாரென்று மறித் துரைப்பான். 3

கங்கை யாள்பெறு காதல னும்புக
ழங்கர் கோனென தாருயிர்த தோழனு
நங்கள் வாழ்துணை நம்பியு நீயுமற்
றிங்கு வாழ்சயத் திரதன்கி ருபனும். 4

அன்றி யேயம ரசா நேகரால்
வென்றி யேதிரு வல்லது வேண்டல
ரொன்றி யேதமெ மகருறு மேலுயிர்
பொன்றி யேயது போகருதன் மேற்கொண்டார்5

எய்து மெங்கள்பி தாமக னேவலாற்
கைகொள் கின்றக டற்படை கண்ணுறில்
வெய்ய வீமன்வி யப்பொடு காத்திடு
மைவர் தம்படைக காற்றவற் றாகுமோ. 6

மேல்வ குத்திவர்க காமின்வி லைர்க்கெனு
மேல்வை யிற்றிறல் யாதவர் சூழ்ந்திடுங
கால்வ ளைத்தசி லைககங்கை யாணமகன்
கோல்வ ளைத்திர டன்னைடம் வாபலைத்தான். 7

வஞ்சர் செய்தவி னைமற லிகருண
வெஞ்ச மம்வினைத் தென்னவும் வேந்தர்கோ
னெஞ்ச முண்மகிழ் வெய்தவ நேரலா
ரஞ்ச டகசனன் றூர்த்தன ஞர்ககவே. 8

ஆர்த்தன வளைக ளெங்கு மதிர்ந்தன பல்வி யங்கள், போர்த்திரட் படைகின் றாப்பப் புவநமீ ரேழும் பூத்த, தீர்த்தனுந் தனது சங்கைச் செங் கையால் வாங்கிக் கொண்டு, கார்த்திரண் முழக்க மென்னக் கடல்கிளர்ந் தார்த்த தென்ன. 9

வையம னைத்தையும் வாரிமுன் வைக்குஞ்
செய்யதி ருப்பவ ளத்திடை வைத்தா
னைவரொ னக்குயி ராதலி னாலே
யுய்வது மகனிலை யென்பதை யொத்த. 10

தருமனடல் வீமனருச் சுநநகுல சகதேவன்,
திருமருவு விசயம்ப வணடாந்தே வதத்தமெழின்,
மருவுறுசு கோடமணி பட்பகமென் றிடுமிவற்றி,
னுருமனைய குரலெதிர்ந்தார் செவிடதைப்ப
ஊதினர். 11

ஒன்ற லாதுபல் ஞதி னர்கள்பல ரூதும் வால்
வளையி னோசைபோய், நினற கௌரவர்க ணெஞ்
சை யூடுருவி யஞ்ச வானிறுநி ரம்பிமேல், வென்றி
சேரமாதொ டகும் வேலையினில் வெள்ளை
மாடவு தேரின்மே, னின்ற போர்விசய னென்று
மாயனெதிர் நில்ல லாமையொடு சொல்லுவான.

யாவர் போர்கருதி யெய்தி னர்களெதி ரெய்தி
நின்றவிவர் தகளில், யாவ ரோடமாதொ டக்க
லாமெனவ றிந்து கொள்ளுமள வியாவைடங்,
காவல் பேணியவை தந்து பின்னவைக ரந்து
கொண்டருள்செய் கண்ணனே, மேவ நீகடவு

மாதகைகொ டேரினைநி றுத்து வாயெனவி ளம் பினன். 13

விளம்ப மவ்வளவின் மேக வண்ணனுமவ் வெள்ளை மாநடவு தேரினைக், களங்கொ ளும் பரிசு நின்ற தானைநடு வேக டாவியிது காணென, வளைகொள் கங்கைமக னுதியாகமுடி மன்ன ரியாவரையு முன்னுறுத், துளங்கு கினறமொழி யோடு நெஞ்சினெடும் வல்ல வாறுசில சொல் லினன். 14

தாலினருந் தந்தையருந் தந்தையர்தந் தந்தை யரு, மேவியுடன் பிறந்தாரு மெய்ஞ்ஞான மளித் தாரு, மாவிடைய நட்டாரு மான்றேரு மமர்க் களத்தே, மேவியவெம் பொருட்டாக வீடுவான் றொடங்கினர். 15

தீதறு சிறுவர்மற் றவர்கள் சேய்களு
மாதுலர் மிகர்களோ மாய்கின் றாரெனக்
காதல்செய் திடரினுற் கலக்க முற்றவன்
மாதவ னெதிர்சில மறித்திவை கூறுவான். 16

வாயெ யன்றி முகமலரா மநமொன் றுணர மாட்டாது, நீயே யென்ன வுடல் வெதும்புஞ்

செவ்வே நிற்க மாட்டுகிலேன், வேயே தருதிண் காண்டீப வில்லு நழுவி விழாநின்ற, தாயே யனையராய் போர்நின்ற தமரைக் காணுந் தொறு மன்னே. 17

ஓத லாகா நிமித்தங்க ளொன்றே யல்ல பலவுளவாங், காத லாரைக கொன்றுபெறும் பயனே வொன்றுங் காணேனு, ஞதலாலிவ் வென்றியுட னரசி னுரிமை யானதனை, யேய்த லாவ தென்கின்ற நியாதின் பொருட்டோ வியம்பாடால். 18

அரசவ் வரசால் வரும்போக மதனு லின்ப மெய்துமென, வுரைசெய் பொருள்கள் யாவர் சிலர் பொருட்டா லுலக ருழந்த டைவர், வுரை செய் புயனே மற்றவர்தம் பொருளுந் தங்கள் வாணுளு, நிரைசெய் தொருவ ரொருவரின்முன் னிற்க வந்து நின்றூரால். 19

ஆன பொருளீ தாதலினு லவரைக் கொன்று லருள்சேரா, தீன மன்றி யெக்க ஏகஷோ ரின்ப மெங்கு மில்லேயாற், கூன வரிவிற் கொண் டென்னைக் கொலினு மவரை யான்கோறல்,

தேர்விசய, னுய்வண்ண மதுநாடி யொருவண்ண
மூலகோதுங், கைவண்ண மலருடைய கார்
வண்ணன் கட்டுரைப்பான். 1

ஆயா தவர்க்கு மலிகட்கு மடுப்ப தழியாப்
பழியனது, தேயா வறிவைத் தேய்ப்பதறச்
சிறுமை களிலே சிறுமையது, சாயா நரகத்
திடைசாய்ப்ப தின்போல் பவர்க்குத் தகுதி
யன்றி, தேயா நிலத்தே யுனையையா வெவ்வா
றடைந்த தெனவறியேன். 2

ஒவ்வாதீ தொழிந்தமர்மே லொருப்படுகென்
றருககரிய, செவ்வாயன் றிருமொழியத் தேர்
விசயன் செப்பவான், மெய்வாயி னெடுமாத்
தான் மிகப்போற்றற் குரியாரை, யெவ்வாறு
கொலைபுரிவே னென்றிவ்வா றியம்பினன். 3

மாற்றலர்க ளென்றிவரைக் கொன்றுபெறும்
பெருவாழ்வி, லேற்றமுறைத் தியான்பிறர்பா
லிரந்துண்கை யினிதன்றோ, கூற்றவர்க ளுயி
ருண்டா லவர்குருதி யாற்குழைத்த, சோற்றை
யுணல் போன்மன்றோ யான்பின்னைத் துய்ப்ப
பதலாம், 4

தவர்கொள்படை விடுகையோ தவிர்கையோ
தகுவதுமற், றவர்களெனை வெல்வரோ யான்
வெல்வனோ வறியே, னிவர்கள்சில ரிறந்தக்கா
லதனாலே யென்னுயிர்போ, மவர்களமர் தொடங்
குகவென் றடல்குறித்து நின்றாரால். 5

ஆதலா லறிவாய விழியினைமற் றக்கவர்
பாற், காதலா லிருண்மறைப்ப நெறியெங்குங்
காணேனா, னாதலா லெனக்குறுவ தறிகிலே
னுரைத்தருள்வாய், சாதலா னதும்பிறப்பு
மில்லாத தனிமுதலே. 6

உஞ்சே போகு நெறிவாளா வுரைப்பனோ
வென் றுளங்கருகிற், றஞ்சே யென்றுன் சரண்
புகுந்தேன் றண்டிற் பணிந்தேன் றாமரைக்கண்,
மஞ்சே யுன்றன் மாணாக்க னாயுன் பாத மலர்
புனைந்தே, னஞ்சே லென்றிங் கடியேன்செய்
வினைக ளொழி யருள்புரிவாய். 7

மண்ணாளும் பெருஞ்செல்வ மன்றியே மாயாத,
விண்ணாடு பெற்றிடினு மென்னுடைய மெய்
யுணர்வ, நண்ணாம லடுதுயா ரவிடாமற் காப்ப
தனைக், கண்ணாவிங் கெவ்விடத்துங் காண்கிலே
னெனக்கலுழ்ந்தான. 8

நெய்ம்மார்பிற் சொரிவதென நெடுங்கண்க ணீர்சோர, விம்மாநின் றுவன்காதல் வெந்தீயால் வேவாமே, கைம்மாறொன் றின்றியுயிர் காப் பதே கடன்பூண்ட, வம்மாயன் றிருவாய்மை யருண்மாரி யாலவிப்பான். 9

மின்னை யனைய திருக்கைகொண் டருளி விரைத் தாமரைநாறும், பொன்னை யணியுந் திருமார் பன் போகாத் துயர்போம் பரிசெண்ணி, முன்னை மறைக ளெடுத்துரைத்து முடியும் பொருளாய் முதற்பொருளாந், தன்னை யுள்ள பரிசவற்குத் தானே சாற்றத் தொடங்கினன். 10

சாவதிலை யாவாகரு நீர்கவுது தானே
மாய்வ தொல நீகருது மாறதாக ளெல்லாந்
தேய்க்கிய தீவினைசெப் பாதமையி னாலே
வீய்த்தீர்ப்ப் போனகை மேவவர்கண் மேன்மேல்.

அன்னவாகள் சோகிதமெ ஹைமுத லாலும்
டற்றவரி போர்கன்முறை யேபகர்த லாலு
மற்றமப வெறிபனமெ யகீனைகொல் வாயா
திற்றமே தாதி வானதைம நந்திடிவை யுங்கேள்.

*மாயுமவ ராலுமுயிர் வாழுமவ ராலு*
*மாயமறி வோர்களறி யாமையறி யாயோ*
*நீயமிவா தாழுகிகழ் நானுநெறி தேரி*
*வேடம்வகை யாலுவகி லென்றுமுள மேகாண்.13*

*பொன்றுவது டம்பதனு ணின்றபொருள் பொன்று, தென்றுமொரி யற்கையொடு சிற்கு மியல் பைககேண், முன்றொடாம கப்பருவம் விட்டிளமை யூட்போ, டொன்றுமுட லாயினுமு யிர்ககிடல்ப தன்றால்.* 14

*அன்னவகை யாலுருவ ழிந்தவரு மாகவே*
*யென்னுருவ மாமறிவி றந்துபிற வாதாற்*
*பின்னதறி வானுடல ழிந்தபிரி போதுந்*
*தன்னதென வேதுமொர்ச லிப்பதறி யானே.* 15

*இட்வகைய தாகிவழல் சீதமிட ரின்பஞ்*
*செயவகையி லாவறிவு சோகுவதெ னென்னின்*
*மெய்வகையி னுவிவைவி ளைந்துதா மேய*
*வைவகையி னுபபல னும்பொறிய மையா.* 16

*சீதமழன் முதலவற்றின் செயல்கேட்கி லகித்தியமாய்ப், போதலொடு வருவனவா யிருககுமவை பொறுநீயு, மாதலினெ பயனென்னி*

லைகொறுத்த பெரியோனை, யேதமவை நிலை
நலசகா வலன்வீடே யெய்துமால். 17

மண்ணி னைய விகாரமும் மண்ணே யந்த
மண்ணொழிந்தப், பண்ணி னரும் பிறரில்லை
பண்ணப் பட்ட பலபொருள்க, ளெண்ணி னகு
லதன்முன்பு மிறந்த பொழுது நிகழ்விடத்தும்,
கண்ணன் னடி மண்ணொழிக் கண்டா ருளரோ
கட்டுரைபபாய். 18

லையாரவி லுழவாவதன் வகையேயிதன்
லகைகேலன், மெய்யானது நசியாதித னுடன்
லேசிறை விரலம், பொய்யானது நிகழாதிவை
டலனகிட பொருளே, டைடாவெனே யறிவாரி
லை யறிவார்பிற ரறியார. 19

யாளும்லகை யதுகேளெழு மொலியேமுத
லிடலம், லானதியில் வருபூதமும் வருநாள்வரு
கிடமா, டாறுமெதழு மறிவியாவையு மறிகாரண
மதுவாய்ப், போநாளொடு வருநாளவழி புண
ராதநொர் பொருளே. 20

அழிடாதமெய் யஃதியாதெனி லவிகாரதை
டருவா, யொழியாநிறை வொடுநீடிய தெனதியா

னென வுணரா, வழியாமதி யியல்பாலிது சில
மாறுகொள் குவதாய், மொழியாவி யயமா
மிதை முயல்வாற்கொல வலரார். 21

இல்லாமையி னியல்கேளெழு கழுதாட்
னிடையே, யல்லாதெழு புனல்போலறி வறவே
யழி குவதா, வெல்லாவகை யினுமாய்வதிவ்
வுருவேயறி வதுதான், கொல்லாதழி கொலை
டானது குறுகாதத னெறிகேள். 22

ஊறுபட வொன்றினுளே பிறத்தல்பிறந்
துளவாதல், வேறுபட வளர்தல்வளர்ந் தய
லொன்றாய் விளைத்தமைதன், மாறுபடத் தேய்
தலமாய்தலென வருகின்ற, வாறியல்பு முடம்
பனறி யறிவுடையா வாதலினால். 23

நில்லா வுடற்கே யின்றேயு நித்ய மாகி யதுகாச,
மில்லா ததுபொய்ப் பிறப்பிறப்பொன் றறியா
ததுமற் றதுவறிந்தோர், கொல்லார் கொலையே
வலுஞ்செய்யார் குலமே விட்டுக் குலமறைக,
ளெல்லாம் விதித்த தொழில்வினையு மியம்பிற்
றென்றே யிதுதெளிநீ. 24

நீறிட போர்வையைப் பெயர்த்துப் பின்னரே
வேறிடப் போர்வையை விரும்பு வாரென
வுறிய வுடலினி லுதித்த வுணமைதான்
மாறிடா துடலினை மருவு மன்னனே. 25

உருட்பான்மை மற்றதனுக் கொருநாளு மில்லையாம்; செருப்பாலெவும் படைக்கலங்கள் சேதிக்க மாட்டாவா, னெருப்பாலெவந் தழி யாது நீராலேக கொழுகாது, மருத்தாலுஞ் சலியாது மற்றதனன் வகைகேளாய். 26

எல்லாப் பொருட்கும் பழையதனை யெங்குந் தானு யிருப்பதனை, கில்லாத தனமை யில்ல தனை நிதயத் துவதைை நிலைபெற்றை, யல்லாப் பலர்கள் பதிஞன்கு மறியா வறிவை யறியாதே, யல்லாப் பொருளபோ லழியுமென விரங்கு கின்ற தென்கொண்டோ. 27

பிறவொ னகொடு மெய்தளர் வாயேல்
பாவர்பி றப்பவர் யாவர்க ளேனும்
சாவர்பெ யர்த்துமவ் வாறுச னிப்பர்
காவலி தற்குள தோகட னேகாண. 28

செறிந்ததிவ் வாறிவ னென்பதுந் தேராய்
பிறிந்திவர் போமிட மும்பெரி தோரா
யறிந்தது நீநடு வேகில னாளே
யெறிந்திடு வேலவா பாலிட னொன்றே. 29

ஒருவ னென்றுங் கண்டறியா ததுகண்டாற்போ லுணர்ந்திருக்கு, மொருவ னென்று முரைத்தறியா ததனை யுரைத்தாற் போலுரைக்கு, மொருவ னென்றுங் கேட்டறியா ததனைக் கேட்டாற் போலுவக்கு, மொருவ னென்றுங் கேட்டாலு மறியா னிந்த வுண்மையினை. 30

இதனை யெவரு மறியாத பொருளைத் தெரிந்துகொண்டுநீ, யிதனை விவரை யான்கொன்றேனென்ப தொழிவா யின்னுங்கேள், விதநா லாய மறைமொழியும் வேந்தர் தருமம வாளமவென், பதனை லமரே தொடங்கதனை யறகன் றெனநீ யையுறேல். 31

செய்தி யின்றியத் தேவர்கள் வானுல
கெய்த நின்றவி துபெறு கின்றவர்
வைதி கந்தரு மாதவ மேற்கொடு
மெய்தி ருந்திய வேந்தாக ளல்லரோ 32

ஆகு தானவ மர்தொடங் காயெனிற்
போக தானப கழுந்த ருமமும்
பாவ மாம்பழி யாம்பப ழியினிற்
சாவ தானது வேதலை யல்லவோ. 33

அன்றி டம்முனை யஞ்சினை யென்பரா
வின்றி டைக்குதி லத்துமுன் னீசெய்த
வென்றி டம்பழி யாய்விற்கு மேவல
ரொன்றி யம்பிவின் ஞங்கிதன் மேலுண்டோ. 34

இன்று வாளமர் தன்னிலெ திர்ந்துநீ
பொன்றில் வானவர் போற்றவிண் காக்குவை
வென்றி சேரிலிவ் வேந்தரெ லாந்தொழ
நின்று ஞாலம ளிக்குவை நீயரோ. 35

துற்ற வின்பமுந் துன்பமுந் தோல்வியும்
வெற்றி யும்மிழ வும்மிகு பேறுமென்
றுற்ற வின்னவைக் கொத்தம னத்தனாய்க்
கொற்ற மாசமர் செய்குற்ற மில்லையால். 36

கதலிய பொருண்ஞான கரையறு முறை டாமேல், பொதுகூறு வகைநீயும் புலனறி வகை டாறு, மெதுவொரு வினையாலே யிருவினை களும்விடு, மதுதனை யறிவார்வீ டணைபவ ரது கேளாய். 37

*அரிதெனு மறிஞோர்தஞ் செயலது வழி வாகா, விரிதரு மிடையூறும் வினைகளு மிடை கூடா, தெரிபொருள் சிறிதேனும் பெறுமய றெறுமாறு, லுரியதிவ் வலகோர்பா லதுவல துளதோதான்.* 38

*தெளிபவ ருணர்வொன்றே தெளிவில ருணர் வோதிற், றளிர்க்கர் பலவாகுந் தருபய னது மேவு, மொளிமறை நெறிமேலா வுணர்பொரு ளெனவோது, மளியவர் தெளிபாதா ரவையல தறியாரால்.* 39

*புண்ணிய வுலகத்தே பொருண்முடி வென வைப்பார், மண்ணியல் பிறவிக்கே வரும்வழி நெறிநிற்பார், பண்ணிய வினைகட்கே பயனினை பவர்தம்பா, னுண்ணிய பொருள செப்பார் நுணுகிய வறிவுற்றோர்.* 40

*நவைதரு குணமுப்பா னணுகிய பயனுற்றோர், சுவைதெரி குணம்வைப்பார் தொழின்மறை நெறியுற்றே, கவைதரு குணமுற்றோர் கருமம திடமிற்று, மவைகெட வருமப்பா லறிவின னெனநிற்பாய்.* 41

குளமுத லியவற்றே குளிமுத லியதுய்ப்பா,
ளவுறு பயன்பெற்று வவைகொள லருமைத்
தோ, வளமுறு கருமத்தால் வருசிறு சுவைவற்று,
வளமிகு பிரமத்தே யுளகொள லெளிமைத்தால்.

அறிவினை யறிகிற்பா யகிலமு மடைவுற்றே,
பிறிபொழு தினிலொத்தே பெருவினை தனினிற்
பாய், செறிதரு மறிவொட்டா வகையினை தனி
னிற்பார், சிறியவ ரெனமிகவோர் தெளிபவர்
செயலைக்கேள். 43

விடலரும் வகையிற்றும் வினைப்பய னது
விட்டே, கடவிய வினைமுட்டா வகைசெய்து
கழிகிற்றே, னுடலொடிவ் வுலகத்தே யுளனென
நிகழ்கின்றே, யிடரினை யறவிட்டா னெனையறி
வகைபெற்றான். 44

தருபய னதுவிட்டே தகும்வினை செயலுற்று,
லருமய லறமாறா லறிவுறு மறிவுற்று, லிருவினை
விடும்விட்டா லிழிவொடு பெறுதற்பா, லொரு
மரம் வருமத்தா லெனையுணர் வுணர்வப்பால். 45

பேதைமை யடைகுற்றே பிறிதுறு மாமற்றே,
யேதமி றெளிவுற்று னியாதொரு பொழுதப்போ,
தோதலொ டுலகத்தோ ருரைகளி னுளம்
விட்டா, னுதலி னெனைமெய்ப்பா டடைதரு
நெறியைக்கேள். 46

தலைநின்ற பொருளைய மின்றியே சலியாதே,
நிலைநின்று னியாதொருபோ தப்போதே நெறி
நின்றான், கலைநின்ற மெய்ஞ்ஞான யோகங்கண்
ணுறுமென்னச், சிலைநின்ற தோளவிசய னிவ்
வண்ணஞ் செப்பினன். 47

இவ்வகை யவனை நின்றே ரெவ்வகை யுரைப்
பா ரந்தச், செய்வகை யிலாதோன் செய்யஞ்
செயல்களென் செப்பு மாறென், மெய்வகை
யருள்செய் கென்ன விண்ணையே முதலாக்
கொண்ட, வைவகைப் பொருளு மீன்ற வவனி
வை யருளிச் செய்வான். 48

அறிவினிற் றன்னு வின்புற் றனைத்தவா வினையு
நீக்கி, வெறிதரு வெகுளி காம மயக்கநீத் தின்ப
துன்பம், வறிதெழு பொழுதில் வாட்ட மகிழ்ச்சி
யென றிவையு மாய்ததுப், பொறிதரு புகழுந்
தீங்கும் போற்றல்போற் றுமை போக்கி. 49

ஆமைதன் னுறுப்போ லைந்துந் தன்னுளே யடக்கு மாபோற், றீமைசெய் புலன்க ளைந்தும் தன்னுளே செறியச் சேர்ததி, வாய்மையு ணிகழு மின்னே வழுத்தவம் படுகின் றூறைற், றூய்மை செய் தெவையு நாளுக் சொல்லுவ தவன்றன் சொல்லாம். 50

குறையுமாப் பிணிப்புற் றூலுங் கொண்டவிப் புலன்க ளெண்ணி, லறைகட லீனய நெஞ்சத் தவாவறு வறிவி னில்லான், மறைமொழி பலவு மோதி யடக்குவான் மகதைத வாகுகிப், பொறை கெடப் பலன்க ளைந்தும் பொறியிலே புகட்டும் கண்டாய். 51

ஆதலாற் புலன்க ளைந்து மடக்கரி தடங்கா தாகிற், றீதிலாக கருத்துந் தீய வவற்றிலே செல் லுஞ் சென்றுன், காதலாற் புகைந்து வெய்ய காமமாக் கொளுந்திக் காம, மேய்தலா காமை தீய வெகுளியா யெரியு மன்றே. 52

எரிகிகர் வெகுளி பொஙக மயககம்வந் தெய்து மெய்தத், தெரிபவை சிதையு முள்ளந் தெரிந்த வை சிதைந்த போதே, யுரியதன் னுணாவு மாயு

முணர்வுமாய்த் தொழிந்த வாறே, யரியவென்
றறிஞர் பேசு மனைத்துமாய்த் தொழியு மன்றே.

வேண்டல்வேண் டாமை யின்றி மிகைசெலாப்
புலன்க ளாலே, மாண்டபோ கங்க டுய்ப்பான்
மநங்கலங் குறுன்மற் றத்தா, லீண்டிய தெளி
வுண் டாமாற் றெளியவே யெல்லை யின்றிப்,
பூண்டநோய் நீஙகு நீஙகப் புலனிலை நிற்கு
மன்றே. 54

அடுத்தலைம் பலன்செ யாதார்க் கறிவில்லை யறி
வின் றூக, விடுத்தமெய் யுணர்வின் றுமான் மெய்
யுணர் வில்லை யாகிற், றெடுத்தபின் சித்த சாந்தி
தோன்றிடா ததுதோன் றுதே, லெடுத்தகல்
லின்பந் தானு மில்லையே யிசைக்க வேண்டா. 55

ஆறசெல் பொருள்க டுய்க்கு மைம்பல னுக்கும்
பின்னே, காறுடர் நெஞ்ச மந்தப் புலன்றனைக்
கலக்கு மாஙகே, யூறிய கடலு ளோடு கலத்தினை
யுடன்செல் காற்றே, வேறுசெய் தறைந்து
மாய்த்து வீழ்த்துமா போல வேயாம். 56

யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள்
போற் காணு, வோதரு ஞானி யத்தை யுளஙகை

யிற் கனிபோற் காணும், யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மென்றுங் காணுவ, காதலின் ஞாகி யதனைக் கண்ணிறைற் றெரியக் காணன். 57

நீரினு னிறைந்து நின்ற கடலிலே நெறிமேற் கொண்டு, நீரினு னிறைந்த வாறு வீழ்ந்ததா னிறைவ ருது, தேரினு யதுபோ லாசை செறிந் தவர் திடமே நோக்கிச், சாருமா லாகி லத்தா வவர்களுஞ் சலிதல் செய்யார். 58

யானென தென்ப தின்றி யெவ்வகைப் பொரு ளும் விட்டான், றுனெனச் சரிகதின் றுன்யா தவினையே யடைடைஞ் சாந்தி, யீனம தடையா ரிதனை யடைந்தவ ரிறகு மப்போ, தேனுமீ தடைவா ரென்னை யடைதுவார் பிறவி யெய்தார்.

டன்னை யோவிக்கு வகமெ லாம்பெற்ற
[illegible] டோதிரு மாரபதந் தணைத்தவன்
[illegible] டோர்டகழ் வேதமு டிவையோ
தன்னை யோவுள்ள வாறெலாஞ் சாற்றினன். 60

2. சாங்கிய யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 90.

## 3. கர்ம யோக அத்தியாயம்.

அலையிலே கடல்கிடந்து மருமறைக ளானவற் றின், றலையிலே யிருக்குமவன் றேரிலே நின் றருளிக், கலையிலே பொருளெடுத்துக் காட்டவு மெய் காணாதே, சிலையிலே தோள்விசய னிவ் வண்ணஞ் செப்புவான். 1

வினையின் ஞானமென வுரைத்தாய் மீள வினைநல்ல, தென்றே யுரையா நின்றனைநா னிவற்றி லெதுநன் றெனவறியேன், குன்றே யனையா யுனையடைந்தேற் குற்ற துயரநீக்கிடுவ தனை, யொன்றே யாக வுரைத்தருள வேண்டு மென்றா னவனுரைப்பான். 2

ஆதியி லுலகினை யாக்கி யன்றுநா
ளோதிய பொருளிவை யிரண்டு முண்மையே
நீதிய லவாவறான் செயலை மாற்றுவான்
மீதியல் வினையுறான் வீடு மேவிடான். 3

ஒருவரு மொருபொழு தினுமோர் காலமு
மிருவகை வினைசெயா தவர்க ளில்லையா
லருமய லவாவறான் வினைய டக்குவான்
பருவா லொடுபொய்யே பாவிப் பானரோ. 4

புலனவை பொறிவழி போக்கு மாற்றியே
பலனற வினைகளென் பொருட்டுப் பண்ணுவாய்
நலனுற மவ்வினை நாச மின்றியே
சலமுறு பிறவியுந் தவிர்க்குந் தன்மைகேள். 5

தேவர்களை மகிழ்விக்குஞ் செயலோடே தெரிந் நிரந்த, மூவகைய வுலகையுமுன் படைத்தருத ந்தன்மொழிவான், மேவரிய சார்பூசை யிது நீங்கள் வேண்டியன, யாவையுமே தருமின்னு மிதுகேட்டீ ரெனவிசைப்பான். 6

செயல்வகையா னிக்களவர் திறம்போற்று மாக்கவரும், படல்வகையா லுங்களையே புறம் போற்றிப் புரந்தருள்வ, ரிடல்வகையா னது பிழையீ ரெனிவிரண்டு திறத்திரு, முயல்வகையா னவனடைவீ ரெனநிலத்தோர்க குரைத்தனனால்.

மற்றவர்தந் ததுகொண்டு மறித்தவரைப் பேணுதார், கற்றவர்முன் பழித்துரைத்த கள் வரினுங் கடைப்பட்டார், பெற்றதுகொண் டவாப்பேணிப் பிழைத்ததுகொண் டுண்ணுதே, யுற்றதுதன் பொருட்டாக வுண்பான்றீ துண் ணின்றான். 8

*உளவாமுயி ருணவாலுண வுயர்மாரியி னுள வாம், வளவான்மழை யுயர்வானவர் மகிழ்வால் வரு மதுதா, னிளவாளரி யனையாயிசை தொழி லால்வரு மிதைமீ, தளவாமறை தருமாமறை யறிவாலதி லுறுமால்.* 9

*இதனல்வினை களிலேவிளை வனயாவையு மிங்ஙன், றிதனல்வரும் வினையாழியி னெறி சேரலர் திரிவார், மதனுறிய புலனேமகிழ் விட மாகவு முடையா, ரதனலவ ரவமேகழி பவரா மென வறிநீ.* 10

*கண்ணிற் கருதரு மறிவைக் கருதியவ் வறிவே மிகவரு களிகூர்வோ, னெண்ணிற் றொழிறரு பயனுற் றிடும்வகை யிசையா துதலில் வினையா வம, பண்ணிற் பெறுவதொர் பயனுண் டோவ வை பண்ணு துறுவதொர் பழியுண்டோ, மண் ணிற் பிறரிவ னிவையுற் றிலனென மதியா ரவை செய விதியாரால்.* 11

*ஆதலா னீயும் பலததின்மே லவாவற் றடுத்தகா ரியஞ்செய்வா யவற்றூற், றீதிலா வீடே சேரலா முன்னஞ் சேர்ந்தவ ரநேகர்பின் றெரியிற், காத*

லா லரசன் சநகனே முதலோர் கருமமோ
டொழுகியே யன்றோ, போதரா யுலகம் புககதே
மற்றும் புரிதிநீ யுலகிதன் பொருட்டால். 12

பெரியவர் பயின்ற படியலாற் பயிலார் பின்பு
ளோ ரென்பதன் றாகி, லூரியவிவ் வுலக மூன்
றினு மெனக்குச் செய்யவேண் டுவதுமொன்
றுண்டோ, வரியவை யென்னு லுறுதவு முறுதற்
பாலவு மியாவையில கையா, பரியவிவ் வுலக மகிழ்
வுடன் வினைதான் பண்ணுதற் கென்னையும்
பாராய். 13

என்செய றவ் வியான்செயா வினைகளியா
வருஞ் செடாரத ஞமேல, மன்செய்த குலங்களை
மயங்கிமாய்க் கிடுவா மற்றவர் மற்றதற் காகப்,
பின்செய லறியா தவாவொடு முயலும் பேதை
யைப் போற்பிறர்! பொருட்டா, லூன்செயல்
களைச்செப் யவைசெய்வார் தம்மி னுணர்வை
வே றாககலு மொழிவாய். 14

மெய்வகை தனககும் புலன்கட்கு முள்ள வேறு
பாட் டினைமிக வறிந்தோ, னைவகை யியற்கைப்
புலன்களே பொறியுற் றழுந்துகின் றனவென

வசங்கா, னிவ்வகை யறியா தவனிரு வினையு
மியான்செய்தே னெனவிளைத் தேயகு, முய்வகை
யிதுநீ யுணர்ந்துனக் கடுத்த வினைசெயென்
றுரைத்துமீண் டுரைப்பான். 15

என்பாற் பொருமை யினைத்தவிர்ந்தென் கருத்
தா யுள்ள வினையிதனை, யன்பாற் பயில்வா
ரியாவர்சில ரவர்கள் வினைக ளறவிட்டா, ரென்
பாற் பொருமை யானுரைத்த விதனை யிகழ்கிற்
பார்களவர், வன்பாராத் தரையி லெழுமாம்
போன் மாய்ந்தா ரறிவ மாய்ந்தாரே. 16

பண்டு செய்பகு திப்படி யேவினை
கொண்டு நின்றிடிற் கோவித ரும்பிற
ருண்டு சொன்னல மென்றுணர் கிற்பரோ
கண்டு நின்றவென் கற்பனை யாலரோ. 17

அஞ்சுபுல னவைதொடரு மஞ்ச பொறி யவை
யாம், வெஞ்சுரனி லுலறியுயிர் வெம்பியழி வுறு
வோ, ருஞ்சுபுகு நெறிதகைய வொன்றுபகை
யளகே, ளஞ்சுதவி லின்பமிட ரென்பவவை
யிகழ்நீ. 18

தடுத்ததொழில் செய்வதுத காததுத னக்கே,
யடுத்ததொழில் செய்துகெடு மேனுமழ கையா,
விடுத்தகரு மம்பெரிது செய்தவனின் மேலோர்,
தொடுத்தகரு மஞ்சிறிது செய்கைதொழி 19

மாய னிவைவின் றுரைசெய்ய விசயன் மறித்
துங் கூறுவான், றீய வினைசெய் யாதவரைத்
திகைப்பச் செய்து திறலாலே, யேய பணிகொள்
வாரைப்போ லியற்று விப்பான் யாரென்றான்,
பாயல் பாவை யாகக்கொண்ட பழையோ னிவ்வா
றெனப்பணிப்பான். 20

திம கர்தனி லேசெ நஞ்செயக
காம மென்னுவகைப் பாய்வளர் கின்றது
வேம யங்கொளவெ குளியென் கின்றது
நாம மற்றத னன்னல மின்னுங்கேள். 21

எஃவ கைப்பய னுந்தின வல்லதை
யெவ்வ கைப்பெரும பாவமு மீவதை
யெஃவ கைப்பொருட் கும்பகை யாவதை
யிஃவ கைத்தெனக கூறவ னின்னுங்கேள். 22

நெருப்பை முற்றிய தூமமு நீடொளித்
தருப்ப ணத்தைம றைத்தன மாசும்போ

லுருப்ப டைத்தன வுள்ளுணர் வியாவையும்
விருப்ப முற்றவெங் காமம்வி ழுங்குமால். 23

காத லாற்றவிக் காமம்பு லன்களே
வாயி லாப்புகுந் துள்ளம யக்குவ
தாத லாற்புல னைந்தும டக்கியே
யேதி லாங்கடுங் காமமி றுக்குவாய். 24

ஆற்று மிவ்வுடம் பிற்பர மைம்புலன்
மாற்று மைம்புல னிற்பர மாமனம்
போற்றும் புத்திய திற்பரம் புத்தியிற்
றோற்று கின்றது காண்பது தொல்பரம். 25

மேலா யுள்ள விப்பொருளை மெய்யா யறிந்து பொய்மாய, மாலாய் மயங்கு மனத்தினையு மடக்கி யந்த மனங்கலக்குங், காலா யுள்ள காமத்தைக் காப்பா யென்று கட்டுரைத்தான், சேலா யுலக முறுபுனலோர் செலுவின் புரையே செலுத்தினேன். 26

3. கர்ம யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 116.

## 4. சம்பிரதாய அத்தியாயம்.

நற்றவ நிகழ்தரு கரும ஞானமு
மற்றம தறவனக் கறியக் கூறினேன்
மற்றவை களின்வர லாறுங் கேளெனக்
குற்றமி லாழியங் கையன் கூறுவான். 1

எவ்மற முன்பியா னிரவிக் கோதினே
னவன்மநு வரசனுக் கறியக் கூறினு
னுவகையோ டவனிக்கு வாகுக் கோதினான்
றவமுய லரசரீ தறிபுர் தன்மையோர். 2

கருதரும் வகைநிகழ் காலஞ் சேறலான்
மருவரும் வகையதாய் மறைந்த வாய்மையை
யிருவினை கெடவரு மியோக நீர்மையை
பொருவரு மறிவரி தாய வுண்மையை. 3

நல்ல காதல்செய் நண்பனு மாயினை
யல்ல தியாவும றியலை யாதலாற்
சொல்லன் மேயின னென்றனன் றூயவன்
மெல்ல வேறுவி சயன்வி ளம்புவான். 4

ஞான மாயிது நல்லவா கேட்டிடப்
போன காலமும் யான்புகன் றேனென்று
யான தாகிலு மவ்வடம் பன்றிது
தான தாம்வகை நீயறி தக்கதோ. 5

சொல்லார் விசய னிதுமொழியத் துளப முடியோன் சொல்லுவான், பல்லா யிரங்கா ணுடம் பெனக்கு முனக்கு நடுவு பரிக்தொழிந்த, தெல்லா மறிவன் யானீய தேது மறியா யிதுவன்றோ, வில்லார் தோளாய் நமக்குள்ள வேறு பாடு விளம்புங்கால். 6

சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநா, னாவாவிவ் வுலகுபடு மழிதுயர்தீர்ப் பதற்காக, மேவாது நின்றேயென் மாயையினான் மெய்யே போ, லோவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும். 7

இவ்வகையென் செயலதனை யறிந்திந்த விடும் பையினின், றுய்வகைய நெறிபெற்றாங் குயர்ந் தாரை யரைப்பரிதால், மெய்வகைய திதுவென்ன வேண்டியவர் வேண்டியன, வவ்வகைய தெய்வமு மா யளிப்பேனும் யானேகாண். 8

செயலாலுங் குணத்தாலுஞ் செலநாலு குல மாக, வியலான்முன் படைத்தேனா னிப்பொழு துங் காப்பேனான், மயலாய வினைப்பயனின் மநம் வையேன் மற்றதனா, லயலாயே யிருக்குமெனக் கவையறிவா ரெனையனையார். 9

உட்டம் படிமுன் னுணர்ந்தவர்க ளுணர்ந்த வினைமே லொருப்படுநீ, செய்யக கருமஞ் செய் யாமை தீய கரும மென்றிவற்றின், மெய்யும் பொய்யு மறிவருமை யறிய வேண்டும் பொருளு மிவை, லெட்டஞ் சிலக்கை யுரவோயிங் கிவற்றின் செடலே யியம்பக்கேள். 10

ஓடு கின்ற புனலாற்றி னோடத்துடனே யோடு வான், மாடு கின்ற மரமோடத் தானின் றாற் போல் வரச்செய்தே, நீடு கின்ற மரங்களிவை நிற்கு மியற்கைத் தன்மைதனை, கோடு கின்றேன் யானெனவென் றுணர்வு மிகவோ னுணர்ந்தாற் போல். 11

செயன்மே னின்ற வறிவிடையே செயலின் மையுமச் செயல்செய்யா, வியன்மே னின்ற பலன்களிலே யெல்லா வினையு மியல்வதுவு, மயன்மே வின்றி யறிந்தானியா ரவனே யெலலா மறிந்தோனு, முயன்மே னின்ற யோகியுநல் வினைக ளெல்லா மொழிந்தோனும். 12

ஆவ தென்பது மாசையு மற்றன
மேவு ஞாகவெந் தீயிடை வெந்தன

யாவர் தங்தொழி லவ்வகை யோர்களே
சாவ தும்பிறப் புந்தவிர்ந் தார்கடாம். 13

எண்ணு மின்றியி கபரம் யானிவை
பண்ணு கின்றன னென்னுமிப் பான்மையோ
னுண்ணு மேல்வினை யுண்டென வோர்கிலா
னண்ணு கின்றவி னைநலி வுண்ணுமே. 14

அடங்கு கின்றபு லன்களொ டாசைபோய்
மடங்கு கின்றம னத்தின னைவ
னுடம்பி தன்பொருட் டாலுள தாமெனத்
தொடங்கு கின்றவி னைதொடக் குண்ணுமோ. 15

பெற்ற தேகொட மைந்துமுன் பேறிழ
வற்ற போதிலொத் தொன்றமொ ருவர்பாற்
செற்ற மேதுமி லாதவன் செய்வினை
குற்ற மோவவற் றின்றிறங் கூறக்கேள். 16

விட்டு முற்றும்வி னைகள்வி னைப்பயத்
திட்ட மற்றிறை தன்னிலெ ழுங்கருத்
தொட்ட நின்றவ னியாகப்பொ ருட்டுறப்
பட்ட கன்மம்ப லத்துடன் மாயுமால். 17

பிரம மாஞேர்பி ரமமே ருப்பிடைப்
பிரம மாகிய மந்திரந் தன்னிறைற்
பிரம மாடச ருவுடன் செய்தபின
பிரம மேயடை வாருளர் பின்னுங்கேள். 18

அறிவ தாகிய வங்கியி லேகொள
வறிவை யேசில ராகுதி பண்ணுவார்
செறிவ தாஞ்சமத் தீயிடை யேசில
ரெறிவ தாயப லன்களை யீவர்கள். 19

உக்தி யப்பொறி யைந்தைய மொக்கவே
யீர்த்தி டத்தழல் வாயிடு வார்சிலர்
கர்த்தி டத்தொழி லிடாவையு ஞானசெய்
சித்தி யோகமெவர் தீயிடு வாரசிலர். 20

தேடிய பொருள்க ளாலுஞ் செயலுறு தவங்க ளாலு, நாடிய யோகத் தாலு நவின்மறை ஞானத் தாலுந, கூடிய பரிசால் வேள்வி குலாவுவ ரநேக ரிக்குப், பாடிய விவர்க ளன்றி யிவர்சிலர் பரிசுங் கேளாய். 21

மகமே னின்ற பிராணனையங் கபான னிடை யே புகவிட்டங், ககமே னின்ற வபானனையப்

பிராண னிடையா குதிபண்ணி, யிகமே யிரண்டு
மியக்கமற விருப்பார் சிலாமற் றிவர்கண்டாய்,
சகமேற் பிராணு யாமத்தின் றலைவின் றவரே
சாற்றுங்கால். 22

இன்னவர்க ளியாவர்களு மியாகமறிவாரே,
யன்னவர்க ளேயறனி றீமையின கன்றோர்,
சொன்னபரி சாலிவைதொ டங்கமுடி யாதார்க்,
கென்னபரி சாலுமிக மில்லைபா முண்டோ. 23

இப்படி யுரைத்த விர்த யாகங்க ளியாவ
முன்னஞ், செப்பிய பிரமத தின்கட் செகித்தன
செய்யுங் காலை, யொப்பரி தாய புத்தி கருமத்தி
ைகா துள்ளத், தப்படி யறிந்து நீயும் பாவத்தி
னகல நிற்பாய். 24

தொன்மை யாகமுன் சொன்ன துரைக்கெலா
நன்மை யாமிகப் பாலது ஞானமே
பின்ம யாலறுத் தாங்கது பேணிடுந்
தன்மை யாதெனி லாங்கதுஞ் சாற்றுவாம். 25

விழியாமென வறிவாலறி வுறுவார்விழி வசமே,
வழிபாடுசெய் தவர்சேவடி மலர்சூடிட வலரே,
யொழியாதெவர் களுமியாவையு மொருநீயென

திடைப்பன், றழியாவகை யதுவாவதொ ரறிவேயுரு ணுவரால். 26

அதனால்வரு பயன்பாதெனி லழிபாதக முதலாய், விதராடரும் வினையாழியி னிடையேவிழுகுறுவார், திதனாகிய வறிவாகிய சிதையாமிதவைபினை, விதனாம்வகை கரைசேருவ ரெனவேயெனி லதுகேள். 27

எறிபாவெரி வருகானிடை யெரியாதன வெவைசா, மறிபாவறி வுடையோர்களு மறிவாரதுவிதுபோற், குறிபால்வரு குணஞானமெய் யகலேகொள விடுமேற், பொறிபால்வரு வினையானவைபொடியாம்தொர் பொருளே. 28

நீதற் பாலாம் வினைபுரி வோருஞ் சிலநாளி, லேதற் பாலா மறிவறி தககோ ரியாரென்னி, ஞேதற் பாலார் பாலுமிவ் வண்மைப் பொருட்டாலக, காதற் பாலா ரைம்புலன் வென்றேரிவாகண்டாய். 29

சொல்லரு ஞாகப் பொருடெரி யாரெது
சொன்னது, மல்லவி தாமென் றையறு வாரங்
கன்பிலலா, ரில்லவ ராவா ரிகபா மில்லா ரிவர்
கண்டாய், தொல்லறி வாலே யையுற வற்றோர்
துறவுற்றோர். 30

அறியா மையிலே பிறந்துன்ற னகத்தே
வளர்ந்த வையுறவை, செறியா லுன்றன் ஞாந
மெனும் வாளால் வெட்டி யறகீககிக், குறியா
லுன்றன் வினைவிளைத்துக கொள்வா யென்று
கூறினு னுறியார் வெண்ணெய் தொட்டுண்டிவ்
வுலக முண்ட திருவாயான். 31

4. சம்பிரதாய அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 147.

---

## 5. ஞான கர்ம அத்தியாயம்.



பூத்தருளி யொருமலராற் புவனமவை யீரே
ழும், காத்தருளி விளையாடிக-கடைசாரங் கண்
ணனருட், தீர்த்தன்மறை முறைமொழிந்த திரு
வாக்குத் தெரியாதே, பார்த்தனவ னெதிர்நின்று
சிலவிநயன் பகர்வுற்றான். 1

கருமநன் றெனவுமெதிர் கழறுகின் றனைதுற
வை, யருமருந் தெனமொழிதி யவையிரண்
டனுமல, வொருமையென் றுயாகல வுரைசெய்
கென் றனன்விசய, னிருமையின் பரிசமிது வென
வியம் பிடுமிறைவன். 2

துறவுநன் றருவினைசெய் தொழிலுநன் றவை
துணியி, லறவுநல் றருவினைகள் விடலிலங் கவை
முயல்கை, பெறலிவின் பமுமிழவி லிடருமொன்
றிலர்பெரிது, துறவின் றவாபுறர்க டுயரினின்
றிடுகிதாழிவர். 3

பெருமைபெறான் றியதுறவு கருமமென் றிரு
மையினு, மருமையொன் றினையடைகு ரவை
யிரண் டையமுடைய, ரிருமையென் றறியுமவ
ரிவைபுரிந் திவரிடல்பி, னொருமையென் றுணரு
மவ ரிவையுணர்ந் தவருணரில். 4

வினைமுயன் றிடவதனின் விளைதருந் துறவது கொ, டெனையடைந் திடுவரெவர் களுமிவண் செயலைவிட, கினைவருந் தகையபொரு ணெறி யறிந் திடுதலரி, தனையதந் தொழில்புரியு மவ ரடைந் திடுவாறி. 5

கவைதருவ குணமுமிகு களிதரும் புலனு மெனு, மிவைகடந் தவர்களேனை யறிவினன் றிசையுமவர், நவைதருந் தொழில்செயினு நலிவ தெங் கவரையவை, யவைகடந் தவர்கள்வினை யவைதுறந் தடைகுவதென். 6

காணுங் கேட்கு முறுமோக்குங் காலா னடக் குங் கண்வளரும், பேணுந் துறகரு மூச்சுவிடும் பேசும் விழிக்குஞ் சிம்பிளிக்கும், பூணு மின்னும் பலவெனினும் புலன்சேர் பொறியின் புணர்ப் பென்றே, அணுவ கிரிபு மெனவொன் றுந் துளங் கான் விளங்குந் துணிவுடையோன். 7

யாரெவ் வினையு மென்பொருட்டா வியற்றிப் பயனை யிகழ்வாவர், சேரும் வினைக ளவற்

றேடுஞ் சேரா ரெய்துந் திறமுரைக்கிற், சார
வடனே பிறந்திருந்துந் தண்டா மரையின் றலை
யிலையு, நீரு மெனலா யிருப்பாதி னின்றோர்க்
கொன்று மிகழாதால். 8

உடனாப புலனாலு மனனாலு முடம்பாலு, நட
மாகு மெனமுயல்வார் நாடோறு முயன்றாலும்,
விடமாகு மவ்வினையே வீடாகும் வினைப்பயனைக்,
கடனாகு மெனமுயல்வா ரதனாலே கட்டுண்பார். 9

அன்பவினை யாகுபயன் விட்டமைதி யாலே,
யொன்பதுபொய் வாசலமை யூரதனி னுள்ளே,
யின்பவரு வாயினிதி ருப்பனியல் பாலே, முன்
பயில்வ தாம்வினைசெ யான்முயல்வி யானால். 10

இவ்வகைய வாயசெய லியாவுமியல் பேகா,
னவ்வகைய மாயையத னாலறிவு றாதே, செய்
வகையன் யானெனது செய்கையிது வென்றே,
பொய்வகைபி னாலழிவ தேபுலனி லாதார். 11

அறிவினா லறிவிலா தவையெலா மழியவே
செறிவினா ரறிவுவா னிரவிபோ றிகழுமா
னெறியினா லதனிலே நிலையுமா யதனிலோர்
பிறிதிலா வகையினார் பிறவியா னறுவிலார். 12

நன்றே ஞாந வருமறையோ னன்ற யஞ்ஞா
யிறைச்சிதனைத், தின்றே யுழலு மவனியானை
யாவென் றிந்தத் திறததெல்லா, மன்றே யென்ற
தாமென்ற தறிவாய் நின்ற வெனையெங்கு,
மொன்றே யாகக் காண்பானிவ் வுடம்போ
டிருந்தே யுடம்பறுப்பான். 13

இகமே நிகழும் புலன்விளைந்த வின்பமெல்
லா மறவிகந்துள், ளகமே விளையும் பேரின்ப
மடைந்தார்க் கென்று மழியாதாம், புகமேய்
நின்ற பலன்பொறிகள் புணர்ந்த வின்பம் போ
மென்றுந், தகமே விடரா மெனவுமவை தககோ
ரென்றுஞ் சாராரால். 14

உடம்புட னேயுள ளாகிவி ருந்தே
விடம்புரை காமவெ குளியின் வேகாச்
சடம்பொறை யாமைத விர்த்தவ னேநல்
விடம்புகு ஞாகியு மின்புறு வானும். 15

மெய்யறி வேவிளை யின்பம தாக
மெய்யறி வேவிளை யாடிட மாக
மெய்யறி வேயொளி யாகவு மேயோர்
மெய்யறி வேபெறு மின்பம்வி டாதார். 16

காவக்செய் தைர்துப வன்கணி ரண்டு
மேவவி ருப்பரு வத்திடை விட்டிட்
டாவகை நின்றவ பானபி ராணை
னேவலி னின்றியி யக்கம றுத்தே. 17

அஞ்சபொ றித்திற னைசய டக்கா
நெஞ்சப யத்தொடு கோபமு நீக்கா
வெஞ்சதி றத்தவில் யோகிகள் காணு
மூஞ்சபி றபபிடர் யாவுமு திர்ப்பார. 18

சாதி புரிடத் தொழில்களுக்குந் தக்கோர்
செய்யுந் தவங்களுக்குந், நீதி யுலக மேழினுக்
குஞ் சேரு மிடமா யுள்ளவனே, யோகி முடியும்
பரிசேமெய் யுணர்ந்தார் பிறவா ரெனவுரைத்தா,
னாதி முடிவொன் றின்றியே யடையத் தானே
யாய்கின்றான். 19

5. ஞாந கர்ம அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 166.

## 6. யோக அத்தியாயம்.

யோகம நத்தவர் யோகம தற்கே
யேகமு தற்பொரு ளாகியி ருந்தே
நாகப ணத்திடை யேநட மாடும்
மேகம வற்கிவை மீளவி ரிப்பான் 1

செய்தவி னைப்பயன் விட்டிவை தீரா
தெய்தவி யற்றியி ருப்பவ னேகா
ணுய்யவி னைத்திடு யோகிநன் ஞானி
வெய்யத ழற்பொலி வேள்விசெய் வாரில். 2

மேவின யாவையும் வீடுத லில்லார்
யாவர்க ளேனுநல் யோகிக ளாகா
ராவர்க ளாகில வாவற லேகா
ணோவவி லாதநல் யோகமு மையா. 3

உய்வகை யோகமொ ருப்படு வார்க்குக்
கைவரு மாசெயல் காரண மேகாண்
மெய்வகை யோகம்வி ளைந்தபின் மெய்யே
செய்வன வானவை தீமைய வேயாம். 4

புன்மைய வானபொ றித்திற னோடும்
பன்மைய வானவி னைப்பய னோடு
மன்மைய னானவ னப்பொழு தையா
தன்மையின் யோகம திற்றலை நின்றான். 5

எண்டிகழும் யோகத்தை யிப்பரிசே யெப்பொழுதுங், கொண்டுபயில் வார்கடைக்காலென்னையே கூடுவார, லுண்டியினின் மிகுவாருண் டுறப்பார்மிக குறதகிடுவார, கண்டுயிலையறததுறப்பா ரவர்கதிகைகை வாராதால். 13

துயிலு முணவுஞ் செயமெதாழுலு மிகாமே குறைந்து தோன்றுமே, பயிலு மவனே யோகத்தைத் தன்பாற் படுக்கும் பான்மையா, னயிலும் பொறிவிட் டவ்வறிவு தன்பா லடங்கு மப்பொழுது, குயிலு மியோகந்
றுங் கவனைக் கூறலாம். 14

இப்பரிசு பயில்கின்ற யோகிகா விலாவிடத்து, மெய்ப்பரிசு நடுக்காத விளக்குப்போல் விளங்குமா, லெப்பொழுதாங் கவனுணர்வில் வண்மையிலே சென்றிசைய, மப்பொழுது பரமாநந்தத்தினையு மடையுமால். 15

யாதொன் றிந்தப் புலனறியா வளவி லின்பமாயிருக்கும், யாதொன் றினைச்சென் றடைந்

தோர்கள் பின்னை யதனி னிரண்டாகார்,
யாதொன் றினைப்பெற் றவரிதனின் மிகக
தொப்ப தூணடென்னூர், யாதொன் றிந்த வறி
வுக்கே யறிவாய் நிற்கு மதினின்றோர். 16

வஞ்சர் வேல்கொடு மார்பினை றியினு
மெஞ்ச வேதழன் மூடியெ ரியினு
நஞ்சி னூழ னுகந லியினு
மஞ்சி டாரது வாநந்த மாவதே. 17

போக மாய்த்துப்பு லன்களைப் போக்கறுத
தாக மாமெய்ய றிவிடை யேயந்த
வேக மாயம கத்தினை மெல்லவே
யேக மாகவி ருத்திக லாதுகீ. 18

வாங்கி யைம்பொறி நின்றம நத்தினை
நீங்கி டாவகை நின்னுளி ருத்தியே
தீங்கி யாவையுஞ் சிந்தைசெ யாமையாம்
பாங்கி யாதது வேபயில் வாயரோ. 19

தேறு நெஞ்சின னுப்த்தன்செ யலலால்
வேறு கண்டறி யாமெய்ய றிவினு
னூறி லிந்தவு டம்புடன் வேறுபெற்
றேறி நின்றவ னேயின்ப மெய்துவான். 20

ஜூழியா திக்த யோகத்தை யென்றுந் தலைநின் றவனென்று, மழியா வின்பத் தினையின்பத் தாலே யடைய மதுசிற்க, வொழியா வெல்லா வுயிர்களுக்தன் னுளளே காணு மவற்றுளளே, கழியா தெங்குந் தானின்ற பரிசுந் தெரியக் காணுமால். 21

யாவ னொருவ னென்னையெல்லா வுயிர்க ளிடையு மென்னிடையே, மேவ வெல்லா வுயிர் களையும் வேறு காதே மெய்காண்பான், றேவர் பகைமுன் செகுத்தோனே யவன்யா தேனுஞ் செய்திடினு, மாவ வவனு கின்றேன்யா னதுநீ யேது மையுறேல். 22

இடாா னதுதா னின்பர்தான் யாவாக்கேனு மாயிடுமேற், படாா நின்ற வவைதானு முறு வான் பரம யோகியென்பான், சுடாா நின்ற வடிவேலோய் துணிநீ யென்று தழாயலங்க, லடாா நின்ற நெடுமுடியோ னருளிச் செய்ய வவனுரைப்பான. 23

எல்லா வயிரு மொன்றுகப் பார்ப்பதியோக மெனவுரைத்தாய், மல்லார் தோளா யிதற்குநிலை

காணேன் மநமா கின்றவிது, கிலலா வியற்கைத்
தாயபபுலனைக கலக்கு மதனை கிலைகிறுதத,
வொல்லா தெனவங் காறறடககற் கொககு
மெனவு முணாகின்றேன். 24

இவ்வகை விசயன் கூற மாயவ னியம்புகின்ற,
னைவகைப் புலனு நெஞ்சு மடககுகை யரிதா
ஞலு, முய்வகை யோக மியாவும் முயற்சியி ஞலு
மொவ்வா, வைவகைப் புலன்செயினப மனைத
தையும் வெறுத்த லானும். 25

வெய்ய நெஞ்சம டக்கிடும் வேறிதற்
கைய மிலையென் றேயதி யாதலாற்
பைய வேகர ணம்பதி ஞன்கையுட
கைக டந்தவா யோகமுங கைகண்டார். 26

என்று கூறவி சயனி யம்புவா
னின்று யோகததி லேனெடு நாளெலாம்
பொன்றுக காலதத யாந்துயிர் போயினுற்
சென்று நற்கதி யேயன்று சேருமோ. 27

யோக மேவவி னைகளொ ருவினன்
மோக மேவலின் யோகமு டிந்தில
னேக மேயிரு பாலும்வி டாநிற்க
மேக மேயென வீய்ந்துக ழியுமோ. 28

மைடவி துவென்ம நத்தினின் மற்றிந்த
வையம ருககவல் லாரில்லை நீயன்றி
யப்பவி தனையு ரைடென்ன யோகத்தின்
மெய்யனி தனைவி ரியவு ரைககின்றான். 29

பொய்ம்மைய டையாப்பு லனுடை மாந்தர்க,
ளிம்மையி டையம றுமையு லகத்தும்,
வெம்மைய டைகிலர் மெய்ம்மைவி டாரொன்றுஞ்,
செம்மைதெ ளியின்னுஞ் செப்புதுங கேளாய். 30

யோகமு டியாதி டையேயி றந்தவன்
டாகவி னைபல செய்தாங்கி சைந்திடுஞ்
சோகமி னுடெய்தித் துன்பந்தொ டாதே
போகநு கர்ந்துபல் காலங்கள் போயபின். 31

சிறந்தவ ரசர்தி ருககுலத தாத
லறந்தரு யோகிக டங்குலத் தாதல்
பிறந்துபெ றுவதெல் லாமெய்திப் பின்னு
மறந்தவி யோகம கிழ்வுட னெய்தும். 32

கொண்டுப விலுங்கு ணமில னாகிலு, முண்டுதெ ளிவென்று ணர்ந்தவி யோகந்தான், பண்டுப யின்றப யிற்சியி னான்றனைத், தண்டுத வின்றி முன் றானேத லைப்படும். 33

அனையவி யோகத்தை யாற்றுவ னென்று
நினையு மவனுநெ றிபிற ழாமல்
வினைகள்ப லசெய்து வேள்விமு டித்தா
னணையுநக திமேற்க திபெறு வானால். 34

நீடும நகிலை நின்றில னாயினு
மோடும்வ கையால்வி டாதேயு ழன்றவன்
பாடும்பா வககள்ப லகடந் தாயினும்
வீடும்பெ றுமின்னும் வேறுஞ்சி லகேளாய் 35

எல்லாத்த வமுமி யற்றிநின் றோனினு
மெல்லாகக லைகளுங் கற்றுணர்ந் தோனினுஞ்
செலலாகக ருமமெல் லாஞ்செய் தவனினு
நல்லான்வ வியோகி நீயிது நண்ணுவாய். 36

இருவகைய வினையறுக்கு மியோகிக ளெல்லார்களினு, மருவரிய மநத்தினையு மன்பையு மென் பால்வைக்கு, மொருவனுமே யானுவக்கப்

படுகின்ற னெனவுரைத்தா, னருவெனவன் றுரு
வெனமுன் பாரானு மறிவரியான். 37

6. யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 203.

---

## 7. மாயா ரூப அத்தியாயம்.

---

உய்ய வன்பினொடு மென்னை யேயடைய
மியோக மேபயிலும் யோகிதா, னைய மின்றி
யெனை யேய றிக்கிடும தைய கீயுமறி வாயென,
வைய முண்டுமறை நீர்மை யுண்டிடையர் மாத
ருண்டிட மலர்க்கிடுஞ், செய்ய தண்பவள வாய்தி
றந்துதிரு மாது கேள்வனிவை செப்புவான். 1

மாயு மாயைமறை யாத னெஞ்சினிடை மற்
றெ னுண்மையினை வாய்மையா, லேயு மாறறவ
றிந்து ளோர்களறி யாத தொன்றுமிலை யென்
னினு, மாயு மாதடா நேசர் பாலொருவ
னென்னை யாயுமகம் வைத்துளா, னுயு மாநடா
நேசர் பாலொருவ னேய றிந்துமுடி வாளையா. 2

மண்ணு நீருமெரி தீயும் வாயுவுமவ் வானி
னோடுமக புந்திய, மெண்ணு சீர்மைகளில் யானெ
னும்பதமு மென்னு மெட்டுமிவை யன்றியே,
பண்ணு சீர்மைகளின் மேல தாயுலகி லியாவை
யுங்கொடுப ரித்துடற், கண்ணு நீடுயிரு மாகி
யென்னுடைய மாயை நிற்பதுனை கேளினேய். 3

கண்ணி னற்றெரிய லுற்று ணர்ந்திடிலி
ரண்டி னலும்வரு காரிய, மண்ணி னிற்பந
டப்ப வென்றபொருள் யாவு மற்றவிரு பான்மை
யே, நண்ணி நிற்பதல காத லானுலகி னைச
வுற்பவமு நானலா, தெண்ணின் மற்றறிவ தில்லை
யெப்பொருளு மென்னி னந்நியம தில்லையால். 4

வேத மாகிநிகழ் யான லாதுலகி லென்னின்
வேறெனவி ளங்கிடும், பூத மானவைபொ ருக்க
வேறுபொறை யாள ரில்லையெது போலெனி,
லோது மாமணிய நேக மூடுருவு கோவை நூலி
னொரு பான்மை போன்ம், பேத மானபொரு
டோறு நான்மருவி நின்ற வாறுநனி பேசுகேன். 5

திரியுமிரு கதிரினிடைத் நான
றிருமறையி, னரியமுத லெழுத்ததுநா னடவர்

பா லாண்மையுநான், விரிடனவிற் சுவையதுநான் மேதினியில் வாசமுநா, னெரியில்வரு வெம்மைய நா ஞகாசத் தெழுமொலிநான். 6

ஆன்றவறி வுடையோர்பா லறிவுநா னடங் கினர்பால், வான்றவநான் வளர்நன்மை பூண் டார்பால் வண்புகழ்நான், றேன்றமிகு திறலோர் பாற காமமுறாத தொல்வலிநா, னூன்றபொரு ளனைத்தினுக்கு முயிராகி யுளளேனன். 7

மூன்றுகுண வகையாகி முடிகின்ற பொருண் முழுதுந், தோன்றுவது மென்னிடையே யெனைத் தொடாந்தே கிற்பதுவ, மான்றவமற் றவற்றி னிடை யான்றேன்றே னவற்றினுக்குச், சான் றெனசிற் பேனல்லா வவைசார்ந்து வாழேனன்.8

மைக்குணங்க ளெனமுனம்யான் வகுத்து கினக் குரைத்திட்ட, விக்குணங்கண் மூன்றுனு டகப்பட் டறிவிழந்து, தொக்கிணங்கு கின்றவைய ரிவையெல்லாஞ் சுடர்வேலோ, யக் குணங்கள் கடந்தவெனை யறியுமோ வறியாவால்.

இவ்வகைய குணமூன்றி னியற்கைத்தா யாரா லுஞ், செய்வகைய தல்லாவென் மாயையினாற்

றிகைப்பொழிந்திங், குய்வகைய தரிதெவர்க்கு
மெனினையே யெப்பொழுது, மெய்வகையோ
டடைகின்ற மாமிலரேல் வேல்வேந்தே. 10

ஊழாலே வருமிந்த மாயையினா லேயுள்ளம்,
பாழாக வறிவிழக்கே பறியுண்டு நெறிகினோர்,
வீழாத தீவினையே வினையாக விளைக்கினார்,
கீழானா ரெனையடையா ரடைவாருஞ் சிலருளா
கேள். 11

செல்வம்வி ரும்பினர் செல்லல டைந்தோ
ரல்லல்கெ டுக்கவெ னன்புசெய் வோரக்
னல்லத றிந்தமெய்ஞ் ஞானியிந் நால்வர்
வல்லதி லென்னைவ ணங்குத வந்தோர். 12

இன்னவர் தங்களி லென்றொடும் வேறு
யன்னவி லாமையின் ஞானியு யர்ந்தோ
னன்னவ னலனெ னக்கவ னுக்கே
நன்னல னாகுவ னானு லதந்தோய். 13

ஓதரு ஞானியென் னுண்மையி னுள்ளே
யெய்தலி னாலவ னென்ன வேயா
மாதலு மிங்ஙன நேகமெ னச்சொல்
காதலி றந்தப வங்களி னாலாம். 14

விரியவ னார்ந்தவி ழுப்பொரு ளெல்லா
முரியவெ னன்றிய லாதவொ ழுக்கந்
தெரியவ றிந்தெனை யேசெறி கிற்பா
னரியன வுன்பெறு தற்கயில் வேலோய். 15

மற்றவ ருந்தம கங்களில் வைத்த
பற்றதி லேபரி யுண்டறி வெல்லா
முற்றவை தந்திடு தெய்வவொ ழுக்கா
னற்றவ கின்றவை கணணுவர் வேலோய். 16

யாவனொ ருத்தனி யாதொரு தெய்வ
மேவவ ருச்சனை யன்பின்வி ளைப்பா
னுவச்ச விப்பறு மன்பவ னுக்கே
யாவது முற்றும ளித்திடு வேனான். 17

அளித்தவவ் வன்பொடு மத்தெய்வ காணுங்
களித்தவ னவ்வினர் காதல வெல்லாம்
வெளிப்பட முற்றும ளித்திடு வேனா
னொளிப்பரி தாமுரு மஞ்சவு டன்றோய். 18

சிந்தையி னித்தெய்வ மெய்த்தெய்வ மென்றே
முந்தவ ருச்சனை செய்துமு டிகது
மந்தம கதர்பெ றும்பயன் வாளா
வந்தமு டைத்தத கித்தமு மையா. 19

தானந்த மிலியுவமை தாகின்று தாவரிய,
வாகந்த வுருவமென வெனையொன்று மறிவதிலர்,
கோகந்தன மகனாசர் குலமைந்த னிவனுமெழி,
லாகந்த மிலியொருவ னிவனென்ப ரறிவிலிகள்.

மருவற்ற பிரகிருதி யதிலுற்ற மறைவனெழி,
லொருவர்க்கு மறியும்வகை வெளிகிற்ப நிலையுல
கில், வெருவற்ற பெருமயலின் மாமுற்று விழி
மறைட, வருவற்ற வெனையுகை மறிகிற்ப
நிலையடையட. 21

போனவை யினிமேற் பகுதகின் றவையிப்
பொழுதுபோ கின்றவை யனைத்தும், யானறிந்
திருபப னியாவமா மெனனை யுலகின்மற் றியாவரு
மறியார், மானவெஞ் சிலையாய் வேணடல்வேண்
டாமை தன்னிலே வருந்துண மயககாற்,
றுனமைந் துருவாய்ச் சகிததிடும் பொழுதே
தந்தமெய் யறிவுசார்ந் திடலால். 22

வியக்கமேன் முயன்ற நல்வினை மாந்தர்
விரும்பல ராகிமுன் செய்த, பயககமே வியதி
வினையெலா மறவே பற்றறப் பறிந்துமுன்
போனாற், றுயககமே புரியுஞ் சோகமே முதலாக்

துவந்துவ குணங்களிற் றொடர்ந்த, மயககமே வலாா யொழுககமே கிலைகின றென்னையே மாத் திடை வைப்பார். 23

எறிவரும் பிணிமூப் பிறப்பொடு பிறப்பென் றிவைகெடுத் திடல்பொருட் டாகக, குறிவரும் பரிசு கினைததுமற் றெனையே கூடுதன் மேவிகின் றவர்க, ளறிவரும் பரமந் தனையு மதனை யறிவு மெய் யறிவையு மறிவி, னெறிவருங கரும மனைத தையு மறிவ ரறிந்தபின னிகழ்வ துங கேளாய். 24

தேடும் பழைய வதிபூத மதிதெய் வததோ டதியெச்சங், கூடும் பரிசு கின்றவெனை யறிவா ரிந்தப் புழுககூடு, வீடும் பொழுது மெனை மெய்யே யறியா ரென்றுன் யாம்வெவ்வே, றூடும பழைய மாயககூத தாட்டு விககு மம் மாயன். 25

7. மாயா நப அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 228.

---

## 8. எழு வகை வினு உரைத்த அத்தியாயம்.

அடைய ஞாலத்தை யார்த்ததி லார்ப்புறு
திடையர் தாம்படை யார்ப்பவி ருப்பவ
னுடைய ஞகமுன் போதின வேகொடவ்
விடைய ஞானவன் மீளவி யம்புவான் 1

ஆயபிர மததொடத் தியாத்மமமை கரும
மேயவதி பூதமதி தெய்வமதி யெச்சங
காயமதி லுள்ள ரி சகசெழுமு காயம்
வீயலுறு போழ்திலுனை மெயதெளிய மாறும். 2

விரிடவுரை செய்தருள வேண்டுமென மீண்டவ்
வரியாவி லேதய்லு மாயவனு ரைப்பா
னரியதழி யாமைபத னைத்தினுமு ரைக்கிற்
பெரியதுமோ ழிந்தபிர மம்பிறவு நீகேள். 3

அந்தக் கரணங் களினின்ற வறிவத தியாத்ம மாவதுதா, னிந்தப் பிறவி தனையாக்கு மியாகங் கரும மென்பததா, னந்தற் கமைந்த வுடம் பதனை நானென் கின்ற ததிபூதம், டந்தப் படுமிவ் வுடற்கமைந்த பருடன் றெய்வ மெனப்படுவான்.

எஞ்சு தலைவி லதியெச்ச மாகின் றேனு னிறகருநகா, னெஞ்ச கவரு நெறிகளெலா மடைத்து வினையப் படுவதுநா, னஞ்சு புலனும்

பொறியைந்து மடக்கி யறிவென் பாலதாய்த், துஞ்சு மவர்க ளெனையடைவா ரெவ்வா றென்னிற் சொல்லக்கேள். 5

இந்த வடலம விடும்பொழுதி யாவ னியாதொன் றினைகினைந்தா, னந்த வளவே யந்தப்பா வனையா லதனை யடையுமா, லென்ற னியல்பே யெப்பொழுது மிதயத திடைகொண் டென்பாலாஞ், சிந்தை யொடும்வா ளமர் தொடங்கி லதனை லெனையே சேருதியால். 6

நல்ல கரும யோகத்து ஞாந யோக மதுதனிலுஞ், செல்லு மனனை மிகச்செலுத்திப் பிறிதொன் றினையுஞ் சோரதார், சொல்ல வரிய கதிரவன்ம ணடலம்போற் றோன்றுந் தொல்லோனை, யல்ல தடையா ரவனிபற்கை யடையும் பரிசை யறையக்கேள். 7

எல்லாப் பொருளு மறிவானை யெல்லாப் பொருட்கும் பழையானை, யெல்லா ரையுந்தன் னிலைநிறுத்து வானை யிரம்பச் சிறியானை, யெல்லாப பயனு மீவானை யார்க்கு நினைதற் கரியானை, யெல்லா விடதது மிருளர்தத விள வெகு கதிரபோ லெழுவானை. 8

மருவற் குரிய வன்புடையார் மயங்கா யோக மகத்தாலே, புருவத் திடையே தம்முடைய புரைதீ ருயிரைப் புகவிறுத்தி, யுருவத் தினை விட் டிடிவிக்த யோகத் தாலே யவனோடும், பொருவப் படுவ தப்பொருண்மே லின்னம் புகல்வன் பொருவேலோய். 9

யாதொன்றை மறைதெரிந்தோ ரழியாதென் றெடுத்துரைப்பர், யாதொன்றை யவாவறுத்த யோகிகடா மெய்திடுவர், யாதொன்றை யுற நினைந்தோர் காமமுத லியவிழப்பர், யா தொன்றப் பரம்பொருளா மதைச்சுருக்க வியம்பு வன்கேள். 10

அஞ்சபலன் வழியவைய டைத்தயலு ருதே
நெஞ்சுதனை யிதயகம லத்திடைநி றுத்தி
யெஞ்சுதலி லுயிரவளி யையுச்சியினி லேற்றி
யுஞ்சுபுகு நெறியிதென யோகுடனி ருந்தே. 11

ஓதலினி யற்கையிதெ டோமெனுமெ ழுத்தை
வாயதனி லுரைக்கமன மானது நினைத்தே
மேதகுமெ னைதெள்ளிய வாவிதனை விட்டோர்
வீதலினி யற்கையெனை யேயடைவர் மிகவோய்.

இப்பரிசி ஞெண்டொராறு திங்களள வென்று,
தெப்பொழுது மென்றனியல் பேதினைய லூற்
றார், கைப்படுவ னியானெனியல் கைப்படவி
ருந்தோர், பொய்ப்பிறவி யானதும றித்தடைதல்
பூணார். 13

செய்யாமுன் சார்ந்தவினை தீர்ந்த போதே
திசைமுகனு டணைந்தோருந் திரிய மீள்வர்,
மெய்யாக வெனையடையு மவரே கண்டாய்
மீளாத நெறியடைந்தார் வேறு கூறி, லையா
கேள் சதுர்யக மீரைஞ் ஞாறு மொருபகலா
மாண்டொருநா றபற்கு முள்ள, தெய்யாதாங்
கவருகனோர பகலிற் றோனறி யிராவிறக்குந்
தன்மைத்தாம் போதி பெலலாம் 14

நெறியில்வரு வியத்தமுட னவ்வியத்தங
கூடாத நிலைமை யென்றும், பொறியழியு
மாகைதனி லழியாத புலமென்னும் புதிதன்
றென்று, மறிவரிய நெறியென்று மழியாத
பொருளென்று மடைந்தோர் பினனைப், பிறி
வரிய நெறியென்றும் பெரியோர்கள் பேசுவ
தென் பெற்றி கண்டாய். 15

எப்பொருளு மியாவன்றன் னுள்ளடங்கிற் றெங்குமாய் நிற்கின் ருன்யா, ரப்பரம பரம் பொருளா யுள்ளவெனே யன்பாலே யடைவதையா, வெப்பரிசு வருங்காலத் திறந்தார்கள் பிறவாதார் பிறப்ப ரென்னி, லப்பரிசு வருங் காலத் தினையறிய வுரைக்கின்றே னதனைக் கேட்பாய். 16

அக்கியொளி பகல்வெண்மை யாக்காலதேவதைக ளவர்க ளோடுந், தங்குமறு திக்களிடை யுத்தரா யணஞ்சார்வார் மறுத்துஞ் சாரார், கக்குல்புகை கறுப்பென்னுங் காலதேவதையடைந்து பிறக்குங் கண்டா, யெங்குமறு திகளிடைத் தெக்கணு யாத்திறந்த யோகி யென்பான். 17

எத மான தின்றிவ்வி ரண்டு மாயுமி யோகி தான், வேத மோதி வேள்விதாந மெய்த்த வங்கள் செய்துளா, ரேது வாய நற்பதங்க

ளெய்தி வீடு மெய்துவா, னுத லாலவ் வியோ
மேசெய் யென்று மாய னோதினேன். 18

8. எழு வகை வினா உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 246.

---

## 9. மாயா விகார அத்தியாயம்.

ஈர்வன்றுயர் களையும்பத மீதன்றுகொ லென
வே, யார்வஞ்செயும் விசயன் கொளு மாசங்
கையை யறியாக, கார்வந்தென வவனன்புறு
களிகொண்டெழ வெளியே, தேர்வெண்பரி
குசைகொண்டெழு பாகன்றிரு மொழிவான். 1

அறையும்பொருள் களின்முன்பறு பவமொன்
றிய வதனை, மறையும்பொருள் களின்முன்பற
மறையும்பொரு ளினைமே, விறையுந்துய ரது
வினறிமு னிலைகின்றதை யிசைவோ, டுறை
யுக்துக ளறகின்றதை மொழிகின்றன னுணர்நீ. 2

அறிவொன்றில தறனொன்றிய தசிதன்றிய
ததன்மேல், வழிவந்தமெய் யறிவன்பில னெனை
யெங்கணு மருவா, திழிதந்திடு சகசங்கொடு
மாணகொடு மிகை, னுழிதந்திக பரமொன்றிய
வுருவங்களி லுழல்வார். 3

யாரு மறியப் படாமையதே யெனக்கு வடிவா
யடையநா, னாரு முலகங் களையடையப் பரப்பி
நிற்ப னாதலினார், சாரு முலகிற் சராசரங்
ளெனையே யவற்றை யான்சாரேன், சேரும்
பரிச நின்றாற்போற் றெளியா தார்க்குத் திகழு
மால். 4

முன்னே யொன்றுங் கலவாதியா னிற்பன்
முழுது மாய்கின்ற, வன்னோர் மையினா லுலக
மெனோ டங்கவு கலவா தாதலினா, லென்னை
யென்ற னியற்கையினைப் பாரா யித்தச் சக
மெல்லா, மன்னே யென்றன் மாயைபெறு
மாங்கா ரமுனைத் தருவன்காண். 5

என்னுருவிற் புணராதே யென்னைவிடத்
தோன்றாதே, மன்னுயிர்க ளெனையொன்றுஞ்
சார்ந்துவரும் வகைகேட்டி, லுன்னுமிட மெங்கு

நிறைந் தொளிர்கின்ற வானெங்குந், துன்னி யற்கை செறிகாற்றின் றோற்றம்போன்ஞ் சுடர் வேலோய். 6

ஈண்டுபொரு ளிவையனைத்து மிறக்குங்கா லென்னிடையே, மாண்டுபகும் பிறக்குநாண மற்றவைதாம் வரன்முறையே, மீண்டுபுறப் படு மென்று லாதலினுன் மெய்பார்க்கில், யாணடு முயிர் படைத்துககாத் தழிக்கின்றேன யானே காண். 7

விலங்க லனையாய் பலங்களுடன் வேண்டல் வேண்டா மையைவிட்டுச், சலஙகொள் வினைக ளைசெய்வ னதனு லென்னை யவைசாரா, வுலண்டு வாயா னூறறந்த நூலாற் கட்டுண் பதுபோலப், பலஙக ணினைவா ரதனாலே கட்டுண் டாங்கே பட்டுழப்பார். 8

ஊர்வண நிற்ப வாக வுலகையுண் டாக்கு மென்னை, பேர்பெற வறியா தார்தா மக னென்றே யிகழா நிற்பர், வேறெனு நெஞ்சத் தாசை வினைகளை மிடையச் செய்வா, ராரெனி லவர்க டாமு மரககரோ டசுராவர். 9

அறிவினு லென்னை யாக வறிந்துகொண்
டமைதி யாலே, பொறிவழி யடைதெதப்
போது மென்னையே போற்றி செய்து, நெறி
யினால் வழுத்தி வாயா லென்னையே நினைந்து
நெஞ்சாற், செறிதரு மிவர்கள் கண்டாய்
தேவரிற் றெரியப் பட்டார். 10

காலத் தாலும் பொருளிடத்துங் கணித்தற்
கரிதா கிடவென்னை, ஞானத் தாரகள் புகழ்வரிய
ஞான யாகங் களினாலே, கோவைத் தாங்வே
றுகவெட்க குறிடா கொன்று கவங்கொண்டு,
சாவைத் தாழ்வா ரவருடைய தன்மை யினைநான்
சாற்றகேள. 11

வேதமொழி வேள்விமிகு வேள்விபதி ராகவே
யீதலுறும வேள்வியெரி நெய்சருவி வற்றுற்
காதலுறு வோர்கள்டரி காரியமி தெல்லா
நாதமுத லாயபொரு ளாயவைய நானே. 12

ஆயிலுல கங்களைய ளிதவெதொளிவ ளர்கருந்,
தாயினொடு தங்தையவர் தங்தைதலை கறோர்ட்,
போயினவி னைப்பயன ளிததவபரி வேனை,
னேயமறை மூன்றினுட னேமெனுமெ முதலி
யான். 13

எல்லார்க்குங் கதியதா னிருவினைப்பா ரகனு நா, னெல்லார்க்குந் தலைவனு னெனபொருட்குஞ் சான்றுநா, னெல்லார்க்கு முறைவிடதா னியார்கருமிடர் தீர்ப்பேனு, னெல்லார்க்கு நல்லேனு னெப்பொருட்கும் வித்துநான் 14

தாஙகிய நீரை யெல்லா மிரவியாய்த் தலத்து நின்று, வாஙகுகின் றேனு மீள மழைகளாக் கொடுககின் றேனு, மீஙகுமெய் யுணரில் யானே யாதலா லியாதொன் றேனு, மாஙகருச் சனை செய் கின்ற ரென்னையே யருச்சிக் கின்றார். 15

ஞானமா யொன்றாய் நின்ற வென்னையே நானா வாகப், போனதீ வினையின் மாந்தர் வேள்வியாற் பூசித் தத்தால, வானமா முலக மேறி வாழ்ந்துமண் ணிடையே வீழ்ந்திட், டீனமா மாசை யாலே யிறப்பது பிறப்ப தாவார். 16

மின்னையேய் வேலோ யென்னை மேவுவார் வேண்டிற் றெல்லாம், பின்னையே யென்று தன்றே யளித்தவை காப்பேன் வானோ, மன்னையே முதலாந் தெய்வம் வணஙகுகின்

றுரு மற்றெறன், றன்னையே வணங்கு கின்றார் தாமறி யாத தேகாண். 17

தேவரை யடைந்தோர் தேவ ராவர்கள் பிதிர்க டம்மை, மேவவே யடைந்தோ ரந்தப் பிதிர்களாய் விளங்கா நிற்பார், யாவர்க ளியாவர் பாலா ரவர்களே யாவ ரென்று, லாவவென் னடைந்தார் யானே யாவதற் கைய முண்டோ. 18

போதல ரிலைகாய் நீரே பெற்றதே கொண்டு போற்றிக், காதலாற் றூய வன்பர் தந்ததே களித்துக் கொளவ, ஞுதலா லீவ நோற்ப வுண்பவென் றிவைக ளேகொண், டதெலா மெனககாய்த் தந்தா லென்னையே யெய்த லாமால். 19

எப்பொரு டனக்கு மியானே திருத்தலா லெனககி யாரு, மொப்பார்க ளினிய ரின்றே தாரென வொருவ ரில்லை, யிப்படி யறி மன்பர் பககலே யானு நிற்ப, னப்படி யவரு மென்பா லவனை மமாநது நிற்பார். 20

ஊனையே முதலா யென்பா லொருக்கியென்
னுணர்வார் நாளு, நானையே விட்டுத் தீமை
புரியினு மவர்க ளல்லா, ரேனையேய் புயத்தா
யென்றுங் கேடிலா வின்ப மல்லா, தானையே
பொருகே டில்லை யெங்கணு மவருக் கைய. 21

வணங்கரு மற்ற வேளான் மாந்தரு மகளிர்
தாமும், பணியொடு மென்னைப் பேணிப்
பற்றறத் திடுவ ரென்று, லணிமுடி யாசர்
மேன்மை யந்தண ரடைவ ராகிற், றணிவரும்
பிறவி தீரச் சாற்றவேண டுவது முண்டோ. 22

மின்னையே யனைய வாழ்வி னின்றநீ விருப்பி
னோடு, மென்னையே வணங்கி யென்று மென்
னையே நினைதி யாகி, லென்னையே யடைதி
யென்றே வியம்பினு னிலக்கு வாட்கட், பின்னை
யேய முறுவ லோடும் பேய்முலை யுண்ட மெம்
மான். 23

9. மாயா விகார அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 269.

# 10. விபூதி யோக அத்தியாயம்.

அரிய வெனது நிலைமையைமுன் பலவே
சொன்னே னதுகேட்டே, யரிய மானிற்
கனிகூர வுவவா நின்ற வுனக்கதனை, விரிய
மொழிவன் கேளென்று வேதத் தலைக்கே
வீற்றிருக்குங், கரிய முகிலான் செவ்வாயாற்
காதல் கூரக் கட்டுரைப்பான். 1

தேவர்களு முனிவர்களு மசுரர்களுஞ் சித்தர்
களும், யாவர்களு மறிடாரென் பெருமையை
டென் பழைமையினும், சாவகையும் பிறப்புமிலா
வெனையறிபத தருவாரப், பாவவினை யறவிட்டுப்
பரகதியை யடைகிற்பார். 2

புத்திபொறை தவஞானம் புகழ்பழிநீக் கொலை
பொழிவ, சத்தியநற் சமைதமைநற் செயந்
தானஞ் சாவபிறப், பதகிகொடு நிறைவின்ப
மிடாஞ்ச வஞ்சாமை, யித்தனையுந் தோன்றுவ
தென் னிடைநின்றே டெனத்தெளிவாய். 3

எனைத்துவி தத்தத வததெழு வோரு
மனைத்தையு நிற்பன டப்பன வாக
வனைத்தம நுக்களு நால்வரு மென்ற
னினைப்பினு தித்தன வென்பது கோவாய். 4

இப்பரி சென்னைய றிந்தவ ரென்பால்
வைப்பர்கள் சிந்தையை மன்னுயி ரோடு
மப்பரி சேயறி யாரையு மாங்கே
யுய்ப்பரு ளைப்பரு வப்பர்க ளிப்பார். 5

நிரந்தர மிப்பரி சென்னைநி னைப்பார்க்
கரந்தைகெ டுத்தெனை யாயும கத்தைப்
புரந்துகொ டுத்தவர் தேர்பொரு ளாயே
வரங்களு முற்றவ ளித்தவ ரத்தால். 6

மற்றவர் நெஞ்சின்ம யக்கிரு ளெல்லா
மற்றமின் ஞானவி ளக்கொளி யாலே
பற்றறு விடபவென னப்பழை யோன்முன்
கொற்றவன மற்றிது கூறவ விததான். 7

பேத முடைய பிறப்பகன்றுன் பிறழா நிறைவு பெருஞ்செல்வ, மாதி தேவன் பாப்பிரம மழிவில் லாதா ஞானங்க, ளோத வரிய வத்த மனித கெல்லா முயிர்ப்பா னெனவனை, நீதி முகிவ ருரைத்தவெலா நீயே யருளிச் செய் தனையால. 8

எல்லாப் பொருட்குந் தனிவித்தே யெல்லாப் பொருட்கு மீசனே, நல்லார் பகழுந் தேவர் கட்கு முலகங் களுக்கு நாயகனே, யல்லா லறிவா ராரென்னை யானே யறிவ னென்ன வருளுனுஞ், சொல்லா லுளவப் பொருளெல்லா மெய்யே யானுந் துணிந்தொழிந்தேன். 9

மெய்வகைய வுலகினிடை வேறுவே றுய்கிற்ப, தெவ்வகைய வுருவமுனைச் சார்ந்ததென வறி கில்லே, னவ்வகைய வெப்பொருளு மொளியாம லடியேனுக, குய்வகைய நெறியாக வுரைதரு ளென் றேயுரைப்பான். 10

பருகாநின் றேற்குனது திருவாக்காம் பாலமிருத, மொருகாலு மார்கின்ற நிலையடியேற் குரையென்ன, வருகால நிகழ்காலஞ் செல்கால மென்றிவற்றிம, பெருகாத குறையாத பெருமாயன் பேசுவான். 11

இறந்தவென் விபூதிக்கோ ரெல்லை யின்மையிற், பிறந்தன முடிவறப் பேச வொண்ணுமோ, வறந் தரு மாத்திரை யவற்றி லேசில, சிறந்தன கூறுவ னென்று செப்புவான். 12

ஒகிர் பெருகும் பூதங்கட் கெல்லா மிதயத் துளுறுயிர்நான், பேதித் திடுமிப் பொருட்கெல் லாம் பிறப்பு நிலைகே டாவேனா, னாதித் தியரில் விட்டுணுநான் மருத்து வரினம ரீசியுநான், சோதிக கதிரி லொளிரிரவி யென்று சொல்லப் படுவேனான். 13

சந்திரனா னுண்மீனிற் சாமநான் மறைகளினி, லிந்திரனான் றேவர்களி லிந்திரியங் களின்மநநா, னைந்திரமா முருவுகளிற் சேதநநா னுருத்திரரின், மந்திரமாஞ் சங்கரனா னியககரிலவைச் சிர வணனான். 14

மலைகளின்மா மேருவுநான் வசுக்களிற்பா வகனுமியான், தலைவர்களி லாறுமுகனான் சல நிலையிற் சாகரநா, னிவ்வமிலா யாகத்திற் செபயாக மாவேனா, னிலையுடைய வெனுமிவற்றி லிமவானாய் நின்றேனான். 15

பெருமுனிவிற் பிருகுவநான் பரோகிதரிற் பீதக னான், மருவியவாக கவற்றோநான் மாஙகளிலே யாசதநான், பொருவரிய நாரதனான் பதந்தேண் மா முனிவர்களிற், றிருவியல்கந் தருவர்களிற் சித்திரத்தே ரவனுமியான். 16

சித்தர்களிற் கபிலமுனி தேசிகளிற் கடற்
பிறந்த, வுத்தமமாம் புரவியொனு முச்சைச்சி
ரவசானே, யத்தமுடை விலங்குகளில் யானையிரா
வதமாவேன், விதத்தமா நுடப்பிறப்பில் வேல்
வேந்த ராவேனான். 17

படைகளில் வச்சிரம் பாம்பில் வாசுகி
யடைவரு மநந்தனன் னாகா தங்களிற்
கொடைபயில் சுரபிகோ குலத்திற் கூறிய
வடைவொடு மிவையெலா மியானென் றேயறி.

வருணனு மியமனும் வரைவில் காமமும்
பெருமைசெய் யசுரரிற் பிரக லாதனு
மிருமையி னெண்ணலிற் காலம் யானெனச்
செருவலி தோளினாய தெளியத் தேறுவாய். 19

பொராவருவ கருடனான் புள்ளின் மாககளில்,
விராவரு மடகனை வாயு வேகரா, னிராமனு
னெறிபடை வீரா தங்களிற், காமுகான் மீன
களி லாற்றிற் கங்கைதான். 20

மிக்க சொற்றொகையில் வாத நானரிய
விச்சை யிற்பிரம விச்சைநா, னக்க ரங்களில
கார நானழிவில் கால நானதுவு மன்றியே, தக்க

தொந்துவச மாச நானிருவி னைப்ப யன்கடரு வேனுநான, மிக்க மன்னுயிர்க ளைகொல் வேனுமவை யுற்ப வஞ்செயு வேனுநான். 21

பெண்க ளிற்புகழ்தி ருசொன் மேதை பொறை திண்மை பேசுவினை வென்னவே, யெண்ப குத்தவெழு வோரு நானிருது வாறில் வந்தவிள வேனிலு, னண்ப நற்பெரிய சாம நானுரிய சாம மேழினுந லதநினன், மண்க ளிப்பவரு நிகை ளிற்புகழ தினற மார்கழியு மற்றுநான். 22

கல்லாருந் தோளுடையாய் கவிகளிற்கா யத்திரிநான், ஞெல்லாயவ களிற்சூது துணிவார் பாற் றுணிவதநான், வெல்வார்பால் வெறறியு நான மிகுதிறலோர் பாற்றிறநா, னல்லார்பா னன்மையுநான் ஞானிகள்பான ஞானமுநான். 23

கண்ணனுநா னியாதவரிற் கவிகளிலே யுசநா நான், றண்ணளிசேர் பாண்டவரிற் றனஞ்சயனு னுகின்றேன், விணனுலவு முனிவர்களில் வேத வியா தனுநானே, யெண்ணரிய மறைவுகளி லியம்பாமை யாவேனுன். 24

இரும்புவக மனைத்தினுக்கும் வித்தாகா னெனைப்போகசி யாது மிலலை, வருந்தினுமென் பெருமைகளு வரம்புரைக்க முடியாது வகுத்துச் சொன்னேன், பெருந்திருவை யுடையனமெய்ப் பெருமுடத்சி யனவென்று பேசு மிந்த, வரும் பொருள்க ளனைத்துமென தொளியினல் வரு வனவென் றறிதி நீயும். 26

பலவினி யுரைத்தென் னிந்தப் பல்லுயி ரனைத்து மெல்லா, வுலகமு மொருகூறி னிற்ப தென்னிலோ ரிடத்தி னுளனே, கலவல னவற் றே டென்றான் கஞ்சனு ருயிர்போய்த் துஞ்ச, வலைகடல் வளரா தேபேர்ந் தாயர்பால் வளர்ந்த பெம்மான 26

10. விபூதி யோக அத்தியாயம் முற்றிற்று. ஆகச் செய்யுள 295.

---

## 11. விசுவ ரூப அத்தியாயம்.

சுருளார் கின்ற குழாய்முடியாய் சொல்லு மகமுந் தொடர்வரியா, யுருளார் சகட மிறவுதைத்

தா ரயிர்கட் கெல்லா முள்ளுயிரே, யிருளார் பவத்தே கிடந்துழைக்கு மென்பா லிரங்கி நீயிசைத்த, வருளா ரமுதென் செவிகளா லாரப் பருகி யயாவொழிந்தேன். 1

தெரியா வகைநீ யெங்குமாய் நின்ற வந்தத் திருக்கோல, மரியாய் மெய்யே யடியேற்கு நகாண லாமோ வெனவன்பாற், பரியா நின்ற சிந்தையொடும் பார்த்தன் வினவப் பழமறை தேர், கரியா னவனுக கப்பரிசே காட்டவேண் டிக் கட்டுரைப்பான். 2

எண்ணிலி யற்கைய தெண்ணினி றத்தது
பண்ணியொ ருத்தர்ப டைத்தறி யாதது
விண்ணினி யற்கைசு ருஙகவி ரிந்தது
கண்ணின ளப்பரி தாயது காணாய். 3

மருத்துவர் சூரிய ரட்டவ சுகக
ளுருத்திர ரென்னிடை யேயுளர் யாரு
மருத்திசெ யற்புத மாயவ னேகங்
கருத்துற வென்னிடை யேயுள காணாய். 4

என்றரு ளிச்செய்த வன்கணி ரண்டு
மன்றறி யாவென ஞானம ளித்திட்

டன்றவ னுக்கருள் செய்வகை யேயாய்
நின்றவ ருக்கறி யாவகை நின்றான். 5

அங்கு மால்கொள் கோல மிங்க ளந்து கூற
லாகுமோ கொங்குண் மாலை யாடை சாந்து
கொண்ட கோல மேவியே, யேகரு மாகி யெல்லை
யின்றி யெண்ணில் கோடி பலகதிர், மகருல்
வானில் வந்து தித்த தொக்கு மற்ற தன்கணே.6

எய்வகைய தாள்களொடு தோள்களுமநேகஞ்
சாய்பெறவ ணிந்தவணி தானுமுனநேகம்
வாய்களுமநேகமொளிர் வாண்முகமநேக
மாயுதமநேகமெழு மற்புதமநேகம். 7

அவ்வகைய மாயனமர் கோலமத னுள்ளே
யெவ்வகைய வாயபொரு ளியாவுமெதிர் காணு
வுய்வகைய ஞயினனெ னுவுவகை கூறச்
செய்வதறி யாவிசய னிவ்வகைசெய் தானல் 8

மண்ணுறவ ணங்குமயிர்க் குச்சடனி ரைக்குங்
கண்ணுமரு முங்கரைய நின்றுலைகமு கிழ்ததே
யெண்ணுமுல கங்களையு மியாவரையு மேனுட்
பண்ணுமவன் முன்புசில நின்றுபகர் வுற்றான். 9

தேவரும் வணங்கு தேவ நின்றிருக் கோலத் துள்ளே, யாவரு மெல்லை காணாப் பொரு ளெலா மிசையக கண்டேன், மூவரின் முதற்புத் தேளை முனிவர்க ளோடுங கணடேன், மேவரு நாகங் கண்டேன் விண்ணவர் குழாமுங் கண்டேன். 10

ண்களும் வயிறுந் தோளு முகங்களுங் கருதி நோக்கி, வெண்பல வுடைய வாய வுருவுக ளநேகங் கண்டேன், றண்கதிர் முடியுந் தண்டுஞ் சக்கரப் படையு மேந்தி, யொண்கதிர் கனலோ டொன்று யனையநின் னுருவி னுள்ளே. 11

இந்தவுரு வென்னவுரு வென்றறிய வில்லை
னந்தமறி யேனடுவு மாதியும னைத்து
மந்தலறி யாததனை நான்மறையு நாடித்
தந்தபொரு ளாயதனை மாயைதரு சார்வை. 12

என்றுமுள தாயதையி யற்றரும மெல்லா, நின்றுபிற ழாவகைநி றுத்துநெறி வாழ்வைச், சென்றுகுறை யாததனை யென்பழைய தேவைக், கன்றுதொட ராப்பரிசு நின்றெனெதிர் கண் டேன். 13

வலந்தருதி றத்தொடுவ ருக்கதிரி ரண்டே,
யலர்ந்தெழவி ழிப்பதைய டுங்கனனெ ருப்பை,
மலர்ந்தெழுமு கத்ததைம யங்கவல கெங்குங்,
கலந்துசுட லுற்றதைவி யந்தெனெதிர் கண்
டேன். 14

நிலத்தினொடு வானுறநி மிர்ந்துதிசை சேர்
போய், விலககமற நீயுனது மேனியைவி ரித்தா,
லலக்கணடை யாதவர்க ளாரடைய வையா,
கலக்கமுறு கின்றவுல கங்களிவை காணாய். 15

வணங்கவிமை யோர்களரு மாதவர்வ ழுத்தக்,
கணங்கொடுவி யந்துபுகழ் சித்தர்தொகை கண்
டே, னுணங்குமுயிர்த் தானவர்கள் கந்தருவ
ருள்ளோ, ரிணங்கியின ரென்றறிகி லாரையெதிர்
கண்டேன். 16

வானடைய விம்மிவரு ணமபலவு டைத்தாய்ப
பேய்நடைய வாயபிறை போலெயிறு பேழ்வாய்
தானுடைய வாயபன்மு கம்பலத ழைக்கும்
யானடைய லாம்வகைய தன்றிவ்வுரு வெந்தாய்.

தஞ்சமில் வலகுக கெல்லா மாய்நின்ற தன்மை கணடே, னுஞ்சின னெனினு மற்றன் னுருவறக் காணக காண, நெஞ்சமு நடுங்கா நிற்க நிலேயிலே நிசையுங காணே, னஞ்சலென் றருள வேண்டு மகிலமு மாய வெந்தாய். 18

நூற்றவர் தாமுந் தங்கள் சேனையு மவர்கட் காக, வேறநெதி ராசர் தாமு மென்படை தாமு முன்றன், கூற்றற மெயிற்றிற் பட்டுக குறையுட லாகி நின்று, காற்றுறு தீயி னன்ன முககளில் வீழக கண்டேன். 19

ஒத்ரு நதிக ளெல்லாங் கடலடைந் தாற் போ லுன்னிற், போதரு பொருள்க ளெல்லா நின்னுளே புகுதக கண்டேன, றீதனில் விட்டில் பாய்ந்தாற் போலநின முகஙக ளுளளே, மாதவ வுயிர்க ளெல்லாம் வீழ்ந்துமாய் குநவுங கண் டேன். 20

ஒளியினு லுலக மெல்லா மொழித்தவை யூண்போ தாமல், வெளியினு நீட்டி நீட்டி வெறுஞ் சவை கொள்ளா நினறுய், தெளிகிலே னுன்னை யுனறன செய்கையுந் தெரிகக மாட்

டே, னளியினு லடியேற்குன்னை யுள்ளவா
றருளிச் செய்வாய். 21

என்றவன் வணங்கிக் கேட்ப யாவுமா யெல்லை
யின்றி, நின்றவ னுரைப்பா னுனை யொழியநின்
றவரை யெல்லாம, கொன்றுயிர் பருக லுற்றேன்
கடையகல குறுக லுற்ற, வன்றுல கடைய
மாய்க்கு மவனியா னறிநீ யையா. 22

இறந்தாரே யெனக்கருதிங் கிவர்களெலா
மெனனுலே, யறந்தானு மதுநீயே யாக்கவரைக்
கொன்றுயேற், சிறந்தாய வரசினையுஞ் செயத்தி
னில்வாழ் திருவினையும், பிறந்தார்கள பெருத
பெரும் புகழினையும பேணென்றுன். 23

இவ்வகை மொழியக் கேட்ட விசயனென்
செய்தா னென்னிற், கைதலை மிசைய வாகக்
கட்டுரை குழறக் கண்ணீர், பையவே நெஞ்சிற்
சோரப் பயதநொடும பரிவி னேடு, மைவரை
யெடுதத வள்ளல் பெருமையை வழுத்த
லுற்றுன். 24

ஞானமுத லிந்திரியங்க ளனைத்திற்கு நாயகனே, யூகவினைத் தளையறுப்பா யுன்னுடைய புகழ் கேட்கில், வானவருஞ் சித்தர்களு மனங்களித்து மகிழ்வெய்தத், தானவரு மரக்கர்களுஞ் சாய் துயரப் படுவர்களால். 25

கையும் பதமுந் திருவாயுங் கண்ணுஞ் செய்ய கருமுகிலே, யையையம் பொருளு மறிவரியா யயனூர் தாயே யந்தமிலாய், மெய்யும் பொய்யு மில்லாதா யெல்லா மாகி விரிந்தாயே, யுய்யும் பரிசு நினைந்தவர்க ளுன்னை வணங்கா தவருளரோ. 26

ஆதி தேவ னுவாய்நீ யாக்கைக் கமைந்த வாருயிர்நீ, யேது மறியப் படாதவனீ யெல்லாங் கடைக்காற் புகலிடநீ, யோதி னுணர்கின் ருயுநீ யுணர்வா லுணரப் படும்பொருணீ, நீதி யமனு யழிப்பாய்நீ நீருங் காற்று மாவாய்நீ. 27

எயும் பரிசிவ் வுலகெல்லா மென்றும் பிறப்பித் திடுகின்ற, தாயும் பிதாவு மாவாய்நீ தந்தை தந்தை தாதையுநீ, யாயும் படியே யல்லாத

வையா வுன்னை யடியேனென், மாயும் பிறவித்
துயர்தீர நூறு பிரக்கால் வணங்கினேன். 28

என்பே ரிடும்பை கெடும்வண்ண மின்னக்
தொழுதே னெந்தாயன், முன்பே தொழுதே
னுன்னுடைய பின்பே முறையால வணங்கினனு.
லன்பே யடியே ரூருயிரே யகலா விந்தப் பெரும்
பிறவி, வன்பே கெடவுன் றனையெங்கு மறித்து
மறித்தும் வணங்கினனே. 29

தேவதேவ கின்னில்வேறு தேவரேது செய்
திடும், பாவமேத றங்களேது பற்றியாது வீடெது,
சாவதேது வாழ்வதேத னைத்துமாய தன்மைகீ,
யாவதேது மொன்றுகான றிந்திலேனென்
மாயனே. 30

ஃவதம் வானுளோர்கி லத்துளோர்கி
னைந்துகைந், தோதியோதி யுட்களித்து ணர்ந்து
முன்னை முன்னமே, சாதிபேத மாகிவாழ்ச
ராசரங்க ளுக்கெலா, மாதிமூல மென்றுகான
றிந்திலேனென் மாயனே. 31

சாயைபோலும் வாழ்வுமாடு வீடுதங்கை தா
யெனும், பேயையேறி மாறியேபி றந்திறக்கு
மீதெலார், தூயையாகி யாதுமோர்தொ டகி
லாது நின்றநின். மாயையாவ தென்றுநான
றிந்திலேனென் மாயனே. 32

ஏறுமல்லு வென்றகுன்றெ டுத்தவண்ண
மெண்ணியே, கூறுமல்ல தீரவும்பர் கூறுகின்ற
கொண்டலே, வேறுமல்லை யொன்றுமல்லை
மெய்ம்மைகூறு மப்பொரு, ளாறமல்லை யென்று
நான றிந்திலேனென் மாயனே. 33

யாதவாவென் மைத்துனவ டாவசோதை
பின்னுயிர்க, காதலாய காவியாய கண்ணகண்ண
னென்றநா, ஞேதலாவ தன்றியேயு ரைத்ததீமை
யாவையு, மாதகாத தென்றுநான றிந்திலேனென்
மாயனே. 34

என்னுடைய தோழனென வேகருதியர்து,
முன்னுடைய மேன்மையினை யொன்றுமுண
ராதே, வன்மையினி லின்மொழிம றுதலெதிரு
ரைத்த, பன்மொழிக ளானவைபொ றுத்தருளு
தண்டாய். 35

உண்ணல்விளை யாடுதலு றங்குதலி ருத்தல்,
பண்ணலுறு போதுகளி லுன்பழைமை தன்னை,
யெண்ணியறி யாமையினில் வந்தபிழை யெல்
லாங், கண்ணகரு ணாகரபொ றுத்தருளு கண்
டாய். 36

உண்டாய வுலகனைத்து மீன்றாய் நீயே யுல
ராலு முன்னுண்மை யுணர்ந்து கூறிக், கொண்
டாடப் படுவாய்நீ மெய்ம்மை நல்கிக் குருவாக்க
குற்றநீக்க டீர்க்கின் றாய்நீ, யென்றாலு மறை
யனைத்து முன்னின் மிக்கா ரில்லையென நின்
றேது வெடுத்துக் காட்டக், கண்டாலு நின்பெரு
மை காண மாட்டார் கண்ணிலா தவர்வேறு
காண்ப துண்டோ. 37

அறியாத பருவத்து மகன்செய் குற்ற மருந்
தாதை பொறுத்தெனவு மாவி போலப், பறியாத
தோழன்செய் குற்ற நட்பிற் பெரியோர்கள்
பொறுத்தெனவும் பேதை யேனுய்க, குறியாது
செய்துவருங் குற்ற மெல்லாங் குணமாகக்
கொண்டருள வேண்டு மென்றே, வெறியாரு

மலர்ப்பதங்க ளிடையே வீழ்ந்து வேண்டிக்
கொண் டிவையின்னும் விளம்ப லுற்றான். 38

பண்டு கண்டறி யாப்பழங் கோலத்தைக்,
கண்டு நெஞ்சகங் கலங்கிக்க ளிக்குமாற், றண்டு
நீண்முடி சங்கொடு சக்கரங், கொண்ட கோலத்
தை யேகொண்ட ருளுவாய். 39

என்றவனு ரைத்திடலு மெவ்வுருவு மொன்
றாய், நின்றவனு ரைத்தருளு வானிறையொ
ளித்தாய், முன்றருமு தற்பொருளு மாய்முழுது
மாய, வென்றனுரு வத்தினைமுன் யாவாறி
கிற்பார். 40

வேதநெறி யாலுமிகு வேள்விகளி னாலு
மாதவம தாலுமகிழ் தானவகை யாலுங
காதலர்கள் காணமுடி யாவடிவு கண்டா
யேதமறி யாவெனது யோகவலி யாலே. 41

இப்படிக ளைத்தருளி யீரிருகை யேயா
யப்பழைய கோலமது வாயருளி யங்கே
மெய்ப்பயம கற்றிவிச யற்கிசைய வேறே
யொப்புவரின் மிக்கவரி லாதவனு ரைப்பான். 42

கண்டவ ரில்லை நீமுன் கண்டவிக் கோலங் காண, வண்ட ரும் விரும்பா நின்ற ராதலா லன்பு கூருந், தொண்டரு மாகி யென்னை யன்றியோர் தொடக்கி லாமை, கொண்டவ ரடைவ ரென்றுன் கோகுல மேய்த்த கோமான். 43

11. விசுவ ரூப அத்தியாயம் முற்றிற்று.
ஆகச் செய்யுள் 338.

## 12. பக்தி யோக அத்தியாயம்.



ஏயநா னெதிரே கண்ட வுருவமே யிசைகிற் பாரோ, தூயநான் மறைக்கு மெட்டாப் பொரு ளையே தொடர்கிற் பாரோ, தாயனும் பெரியோ ரென்று தநஞ்சயன் வினவத் தானே, ராயனும் நிரைகண் மேய்க்கு மாயன்வே றருளிச் செய் வான். 1

மன்னநீ காண நான்முன் காட்டிய வடிவை நெஞ்சா, லுன்னல்வாய் மொழியி னாலே யுரைத் தல்செய் பவர்க ளெல்லா, மென்னலாற் பிறி

தோன் றெய்தா ரியாரினு நல்ல ரிங்குச், சொன்
னவ ரன்றி மற்றை யவாகடந் துறையுவகேளாய்.2

உரைசெயற் கரிதாய் நெஞ்சி னுணர்விடப்
படாதா யெங்கும், புரையறக கலந்து போக்கு
வரவின்றிப் பொலிந்த தொன்றைக், கரைசெயற்
கரிய வாய புலன்களைக் கடந்து காண்பா, னாச
மற் றியானே யென்னி னைக்கிய மென்ன லாமோ.3

காரண மிறந்தொன் றிற்குங் காட்சியிற் படாத
தொன்றைச், சேர்பவர் வருததம் வேறு செப்பிட
லாவ தன்று, லோரவரி திதுதான வாழு முயிர
களா லாவ தொன்றோ, வாரவர் பெருமை
தன்னை யளவறுப் பவர்க ளையா. 4

யாவர்கள் சிலவ ரெல்லா வினையுமென் கண்
ணே விட்டிட், டியாவர்த மறிவென் பாலே யாககு
வா ரவர்க டமைச், சாவது முதலா யுள்ள
துயர்க்கட லின்றுந் தாஙகி, யாவர்க ளேனுங்
காலஞ் சிறிதிலே யெடுககின் றேனுன். 5

மெய்யுற வுன்னை யென்னிலே வைத்தா லென்
னில்லே யின்றியொன் றுதற், கையுற வில்லை

யதுசெய முடியா தாயினப் பியாசமே பயில்வாய்,
பொய்யற வதுவும் புரிகிலா யெனிலுன் வினைக
ளென் பொருட்டினுற் புரிவாய, செய்யுமவ்
வினைக ளப்படிச செயாயேல் வினைப்பயன் தவிர
வே செயவாய. 6

அத்தி ஞானம்வி னையின தனினு
மெய்த்தி யானமி குமதின் மேலதாம
விதத்தி னுயவி னைப்பயன் வீடுதல்
சிதத சாந்திய தற்பினசெ றியுமால். 7

இருவகை யுயிர்ககு மினியனு மின்ப துன்ப
மியா னென்னதென் றறியா,. தொருபொரு
ளாலுங் குறைவபா டின்றி யளளமு மொருவழிப்
படாப்,. பொருவருந் துணிவுங் கருணையும் பரிந்து
புலன்றெறி யுணர்வையென் பாலே, மருவின
னொழுகு மியோகியென பவன்காண் மன்னமற்
றெனககுவே றினியான். 8

உலகமுந் தானும் வேறிலா மையினுற்
றொருபொருட் குமஞ் சாதே, யலகிலா வுயிர்
கட் கினியனு தவினு லவைகளுந் தன்னையஞ்

சாதே, புலவரா னவர்கள் புகழுவே கிகழ்வான் பொருளைய மடக்கமுங களிப்பு, மிலகிடா நெஞ் சத் தியோகியென் பவனகா ணியாரினு மெனக குவே றினியான். 9

ஒன்றினு மாசை யின்றியிங் கியக்க டம்வழி யொழுகிடா தொருக்கி, நன்றியி னேடு தீங்கினி ளைதது நல்வினை தீவினை துறந்து, பொன்றினு நோவற் றழுதல்செய் யாதே பூரித்தல் வாடுத லின்றி, யென்றுமுன் பிழந்த பொருட்கிரங் காதே வரும்பொருட் கிச்சைசெய் யாதே. 10

இகழ்பவர் நட்டா ரென்ப தின்றியே யின்ப துன்பர், திகழுவ மாக மாகஞ் சீதமோ டழலின் றீமை, புகழ்பழி யிவற்று ளொத்துப் பொருந்தி வா ழிடமொன் றின்றி, கிகழ்தரு மியோகி கண் டாய் மற்றெனக் குரிய கீரான். 11

செயத்தகு வதவு மாகிச் சேர்ந்தவர் செல்ல நீர, வயகொடு போவ தாய பொருளையா னுரைத்த வண்ண, மியற்பட வுணர்கிற் பாருக்

இயான்மிக வினிய னென்றான், மயக்கற வொருவ
ராலு மறிவரி தாய மாயோன். 12

12. பக்தி யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 350.

---

## 13. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம்.

---

விடம்படுப ணுமுடிய ரக்கின்மிசை யேறி,
நடம்பயிலு நாயகன்ம றித்துமிகு ஞானஞ்,
சடம்படுபி ணிப்பிறவி யென்றிலைவத ரிக்கு,
முடம்பொடுயி ரானவையு ரைத்தருள லுற்றான். 1

டம்பெனவு ரைப்பதுயி ருண்பவைக ளெல்
லா, மிடம்படவி ளைப்பதெதி காணலுறு மீதாற்,
றிடம்படவு மற்றிதுதெ ரிந்துணரு மெய்மைக்,
கடம்படுமு யிர்ப்பொருளெ னப்பகர்வர் கற்றோர். 2

மன்னவுடல் யாவையினு மன்னியறி வாய்கின்,
றன்னுமுயி ரியானிவையி ரண்டிவையு மோர்

காற், றச்மையினி னியாதறிய மற்றதனை ஞாங,
மென்னவுணர் வாயிதுவெ னக்குமிசை வாமால்.3

மற்றிவட றன்னின்வா வுங்குணமும் வந்தாங்,
குற்றமைவி காரமுமு யிர்த்தொகுதி தானு,
கற்றவர்கள் வேறுபட வோதினர்க ளனுஞ்,
சொற்குறைகயி னுவிவைசு ருககமொழி வன்
கேள். 4

எப்பொருளி னும்பெருகி யெங்குமுள வாகு,
மப்பெரிய பூதமவை யைந்துமவை யீனு, மொப்
பரிப ரானுமது வந்துமுனு திககப், பொய்ப்
பகையில் பந்திபவி யத்தமவை தாமும்

காதலிலிவ் வெட்டும்வினைக் காரணம
தொன்று, மோதலரி தாயபல வனைந்துமவை
யண்ணு, மாதலறி யாதபொறி யைந்துமவை
யாவே, யேதவினை செய்கரண மூன்றிறெடி
ரண்டும். 6

இற்றிவைய னைத்துமிட ரின்பமுதல் யாவுந்,
தற்றமைவி காரதைதொ டர்ந்ததொகை கண்

டாய், நற்றவவு டம்பெனவி யம்பவது நல்லோர,
ருற்றவுட லுக்குரிய ஞானமுமு ரைப்பாம். 7

மானமும் பிறர்தனை மதிக்கப் பண்ணலு
மூனமும் பிறவுயிர்க் குறுகண் செய்கையும்
யானென்னுஞ் செருக்குமிவ் விகப ரங்களி
லானபே ராசையோ டறுக்கு மாற்றலும். 8

பெற்றநன் மனையொடு பெண்டிர் பாலர்பா,
லுற்றெழு மவாவிட லுடம்பின் றூய்மைய, மற்ற
வைம் பொறிகளில் வாயில் வாழ்க்கையுஞ்,
செறறமுஞ் சிறியவர் குழுவுந் தீர்தலும். 9

ஒருபெரும் பொருளையே யுளத்துள் வைத்
தலு, மிருவினை கடப்பவ ரிடங்க ளெய்தலுங்,
குருவினை வழிபடுஉ குணமும் குற்றமி, லுறவினை
யன்னவா றுணரு முண்மையும். 10

மூன்றிகழ் பிறப்பொடு மூப்பி றப்பிணர்,
சென்றடை யிடும்பையைச் சிந்தை செய்கைய,
மென்றிவை யனைத்துமற் றிவற்றி னுவினிச்,
சென்றடை பொருளினைத தெரிந்து கேளெனு.11

ஆதியந்த மிலதழி யாதுநின்ற பெருமைய, தோதிலுண்ட திலையெனு மூனமின்றி யொளிர்வது, நீதியின்க ணகிலமு மாகியெங்கு நிறைதலி, ஞேதருநகை செவிதலே கால்களெஙகு முடையது. 12

காணும் புலன்க ளனைத்தினுக்குங் கண்ணுய் நின்று காட்டுவது, பேணும் புலன்க டனக்கொன்று மில்லா தியன்ற பெற்றியது, பூணும் பற்றுத் தனக்கின்றி யெல்லாந் தானே பொறுப்பது, மாணுங குணங்க வின்றியவை மன்னியநுப விப்பதது. 13

பூத மைந்தின கத்தி ஞேடுபு றத்தி னும் பொலி கின்றதிங, கேத மின்றிங டப்ப நிற்பனவாயி ருப்பத தின்னதென், ஞேத ரும்படி நுண்ணிதாகிய தொன்ற தாகியி ருந்துமெய்ப், பேதம் வந்தது போல நின்றுட றங்க வும்படு கின்றதே. 14

அருவ மாயுந் தூர மாயத ணித்து மாயதனைத்துமா, யருவம் யாவும ளித்து மீளவொழிக்கு மானிலொ ழிப்பது, பொருவி லாவொளி

கட்கு முள்ளொளி யாகி யேபொலி கின்றதிங்,
கிருமை வீடிய ஞான மோடதன் ஞேய மாகியி
லைசாதது. 15

ஆன விப்பொருண் முன்பு ரைத்தவ வற்றி
னையறி யும்பொரு, ளூன மற்றம நத்தி னைய்நலு
டம்பு மற்றவு டம்புசேர், ஞான முற்றம வற்றி
னையறி யப்ப டும்பொரு ணன்மைய, மீன மற்றதி
றத்தி ணேடுசு ருக்க மாகவி யம்பினேன். 16

எள்ள லானதி கந்து யான்முனு ரைத்த விப்
பொரு ளீதெலா, முள்ள வாறென தன்பர்
தாங்தெரிந் துற்ப வகைகளென் றோதிடுங், கள்ள
மார்தரு மாயை வேலைக டந்து காதல்செய்
யின்பமாம், வெள்ள மாமெனை யெய்து வாரென
வேறு கூறவி ரும்பினேன். 17

ஓதிய வடம்பிற்கு முயிர்க்கு முண்மையா
யாதிகண் டறிபவ ரியாரு மில்லையாற்
றீதிலிவ் விரண்டனின் செய்கை யென்னெனி
னீதியி னிவற்றையு மிகழக் கூறுவாம். 18

நண்ணிய குணத்தின்வே றின்மை காட்டலாற்
கண்ணிய வினைகளுக் குடம்பு காரண
மெண்ணிய துன்பமோ டின்ப மென்றிவை
புண்ணிய காரண முயிரொன் றின்றதே. 19

இவ்வுயி ரிவ்வுடம் பிதனி லேயிருந்
தவ்வுடல் பயந்திடுங் குணங்க ளானவை
தவ்விடு மிறந்திடுந் தோன்று மிகுகுண
மெவ்வகா னுடையான வெனறி ருத்தலால. 20

உண்பன யாவையு முண்கின் றானுமெய்க, கண்கொடெப் பொருளையுங் காண்கின் றானு மென், நண்பவெப் பொருட்குமொத திருக்கு காதனு, மெண்செயதிவ் வுடம்பிலே நின்ற வீசனே. 21

இட்டடி டயிரைய மிடாகைகை தன்னையு
மெய்ப்பட வறிந்தவன வேட்ட வேறுகர்ந்
தொப்புர வன்றியே யொழுகி வாழினும்
பொய்ப்படு பிறவியின் மறித்தும் போகலான். 22

செறியவிப் பொருளினைச் சிலர்தி யானமாகு
குற்றனுற் றம்முளே காண்கு வார்சில

ரறிவருஞ் சாங்கிய யோக மாகிய
நெறியினு லெங்குமாய நிற்பக காண்பரால். 23

இருமையு மறிவதற் கிடமி லாதவ, ரொரு
மகன் றெய்வமென் றுரைத்த வொன்றையே,
யருமையி லருச்சனை செயவ ராலதன், பெருமையி
லவர்களும் பிறவி மேவிடார். 24

போவன நிற்பவா மியாக்கை பூண்டுகொண்
டியாவருந் துயர்ப்படு கின்ற வீதெலா
மேவரு முடலுயிர் வேறு பாட்டினை
யாவகண் டறிவதோ ரறிவி லாமையே. 25

கெடுகின்ற பூதங்க டோறுங்கெ டாதே
வடுவின்றி நின்றம றைப்பொரு டன்னை
நடுவென்று கண்டவ னல்லன வெல்லாங்
கடுகின்று ணேயொழி யாவகை கண்டான். 26

ஒத்தெங் குமாய வொருமைப் பொருளினை
யத்தன் மையினு லறியு மவனே
செததும் பிறந்துந் திரியா வகைதனே
மெய்த்தன் மையிலே புகவிடு கின்றுன். 27

உணர்வலி காரி யென்றும் வினையெலா
முடம்பி னேடே, புணர்வன வென்றுங் கண்
டான் பொய்யிலா மெய்மையைக் கண்டா, னிணர்
மலர் முடியா யெல்லா வினைகளுஞ் செயினு
மாக்மா. குணமிலி யாத லாலே யவற்றொடுங
கூடி நில்லான். 28

உன்னிய வான மெங்கு மொழிவற நிறைந்த
தேனுர், தன்னுடை நண்மை யாலே பிறவொ
டுஞ் சார்த லுண்டோ, பன்னிய விதுபோ
லெங்கும் பார்த்துள னெனினு மங்கு, மன்னிய
வீச னத்த வடமபொடு மருவ மாட்டான். 29

இரவிதா னொருவ னேயாய் நின்றிந்த வுலகத்
தெவரும், விரவிய விருளை நீக்கி விளக்குறு மாறு
போலத; தாவியா வருமுன் னில்லாச் சராசர
வுடம்ப தோறும், பரவியா னுரைத்த மாயோ
னொருவனே பார்த்து நிற்பான். 30

ஒளின்மே லாகி நின்ற வுயிரினே யுடம்புக்
குள்ள, பேரினே டிறப்பு மூப்புப் பிறப்பெனு
மிவற்றை வேறாய்ப், பாரின்மே லறிவார் வீடு

பற்றினு ரென்றான் பார்த்தன், றேரின்மே னின்
றே வேத சிரத்தின்மே லிருக்குஞ் சீரோன். 31

13. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக
அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 381.

---

## 14. குணாதீத அத்தியாயம்.



செய்ய மாமலர் மேலுறை செல்வியும்
வைய மாமட வாளும கிழ்ந்ததோ
ளையன் மெய்யையன் பாலடி யோமெலா
முய்ய மீளவு ரைக்கத்தொ டங்கினான். 1

நல்ல வாறறி வியாதினு நல்லது
வல்ல நீர்தவத் தோர்க்கறி வாவது
மல்லு லாவிய தோண்முடி மன்னடான்
சொல்லன் மேயவ தன்றனி வாயதே. 2

உணர்வவி காரி யென்றும் விணையெலா முடம்பி ஞேடே, புணர்வன வென்றுங் கண்டான் பொய்யிலா மெய்யைக கண்டா, னிணர் மலர் முடியா யெல்லா விணைகளுஞ் செயினு மாக்மா, குணமிலி யாத லாலே யவற்ரெறுடுங் கூடி கில்லான். 28

உன்னிய வான மெக்கு மொழிவற நிறைந்த தேனுந், தன்னுடை நுண்மை யாலே பிறவொ டுஞ் சார்த லுணடோ, பன்னிய விதுபோ லெகஙகும் பாந்துள னெனினு மங்கு, மன்னிய வீச னாந்த வடம்பொடு மருவ மாட்டான். 29

இரவிதா னொருவ னேயாய் நின்றிந்த வுலகத் தெங்கும், விரவிய விருளை நீக்கி விளக்குறு மாறு போலத், தரவியா வருமுன் னில்லாச் சராசர வடம்பு தோறும், பரவியா னுரைத்த மாயோ னொருவனே பாந்து நிற்பான். 30

ஒரின்மே லாகி நின்ற வுயிரினே டுடம்புக் குளவ, பேரினே டிறப்பு மூப்புப் பிறப்பெனு மிவற்றை வேருய்ப், பாரின்மே லறிவார் வீடு

பற்றினு ரென்றான் பார்த்தன், றேரின்மே னின்
றே வேத சிரத்தின்மே லிருக்குஞ் சீரோன். 31

13. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக
அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 381.

---

## 14 குணத்த அத்தியாயம்.



செய்ய மாமலர் மேலுறை செல்வியும்
வைய மாமட வாளும கிழ்ந்ததோ
ளையன் மெய்மையன் பாவடி யோமெலா
முய்ய மீளவு ரைககத்தொ டங்கினன். 1

நல்ல வாறறி வியாதினு நல்லது
வல்ல தீர்தவத் தோரக்கறி வாவது
மல்லு லாவிய தோண்முடி மன்னயான்
சொல்லன் மேயவ தன்றுணி வாயதே. 2

இன்ன தன்மையின் ஞானத்தி யற்கையா
லென்னை வந்தடைந் தாரிவ்வ லகினிற்
பின்னை வந்தடை யாரிற வாரிதன்
றன்மை யாதெனி லாக்கதுஞ் சாற்றுவாம். 3

மூத வாவெண்கு ணம்மவை மூன்றினும்
பேத மாகும்பி ரகிர்தி தன்னிலே
காத லால்வைப்பன் யான்கரு வக்கருப்
பூதம் யாவம்பு லப்படு கின்றவே. 4

இந்த வண்ணத்தி னாலிவ்வு லகிடை
வந்த யோகியெ லாம்வரு வித்திடுந்
தந்தை யானவை யீன்றளிக் கின்றதா
யந்த வென்னுடை மாயைய தாகுமால். 5

என்று முன்னங்கு ணமென்றி யம்பிய
மூன்று மூலப்பி ரகிர்தி தன்னிலே
தோன்றி யுள்ளன தொல்லுறி வைப்பற்றி
ஊன்றி நிற்பவ வற்றையு ணர்த்துவாம். 6

சத்து வம்ரச சோடுத மசென
வைத்து வந்தபெ யரையு டையன

வெத்து வந்துவ முந்தரு கிற்பன
மெத்து வந்தவற் றின்செயல் வேறகேள். 7

பற்று மாசின்மை யார்ப்பளிங் கொப்பது
வற்ற நல்லறி வானதுண் டாக்குவ
தெற்று மின்பமல் லாற்றன்ப மென்பது
சற்று மில்லது சத்துவ மாவதே. 8

ஓது ராகவு ருவமு டையது
தாது கற்புரை யண்ணிறஞ் சார்ந்தது
பேது செய்வினை யோடறி வைப்பின்னற்
கேது வாடதி ராசத மென்பதே. 9

குறிய நீலம யக்கமுங் கோதிலா
நெறிக டம்மையி கழ்தலு நித்திரை
செறித வானது மறறிவற் றுற்றிண்ணென்
றறிவை மாய்க்கும துதம மாவதே. 10

உரைசெய் சத்துவ மின்பத் துய்த்திடு, மிராச
தம் வினைகளோ டறிவை யார்த்திடும் புரைசெய்
திவ் வழுக்கையே பொருந்திப் போர்த்திடுந்,
தரைசெறி புகழினுய் தமமென கின்றதே. 11

*வாழுஞ் சத்துவ மற்றைய விரண்டையு மறைத்துத், தாழு மற்றைய விரண்டுமத் தமோ குணந் தழைப்பின், வீழுஞ் சத்துவ தமங்களவ் விரசதம் விளைவி, னூழின் மற்றிவை யிரண்டுந் தாழ்த் தோன்றுமிக் குணதாம்.* 12

*ஒத்துநல் லறிவு மிக்க தியாதொரு போதப் போது, சத்துவந் தழைத்த தாகுந் தாங்கரும் வினைக ளேகொண், டுய்த்துவந் தாசைகூர லோபம்வந் துற்ற போது, மத்திம குணமே சால வளர்ந்ததென் றறிநீ மன்னே.* 13

*தக்கது தகாதென் றொன்றைத் தானறி யாத போது, மெக்கரு மங்கண் மாட்டு மிகழ்ச்சியோ டிருக்கும் போது, மோககமெய்ம் மயக்கத் தோடு முறக்கம்வந் துற்ற போது, மிக்கது தமமே யென்று விசயநீ யறிய வேண்டும்.* 14

*தக்கசத் துவமே நிகழ்ந்தபோ திறந்தோர் தெய்வயோ னிகளிலே சார்வார், மக்களிற் பிறப்பா ரிராசத குணமே வளர்ந்தபோ துடம் பினைத் துறந்தோர், மிகவெழுந் தமமே விளைந்த*

போ திறந்தோர் விலங்குச்சா திகளிலே வீழ்வா,
ரொக்கமற் றிவற்றின் பலன்களுந் தெரிய வுரைக
இன்றே னிவற்றையு முணர்வாய். 15

அருங்குண மாய சத்துவ பலமா மழுக்கற
விராசத பலமாம், பெருந்துய ருழத்த றமோபல
மாகும் பேதைமை பேசிய முறையே, பொருந்
திய விந்தக் குணங்கண்மூன் றூலும் பூதசா லங்
களுக் கெல்லாம், வருந்திரு வாய ஞானமோ
டுலோப மயக்கமென் றின்னன வருமால். 16

சத்துவ மாந்தர் பரகதி யடைவர் தமத்
துளோ ரதோகதி சார்வார், மத்திம குணத்தோ
ராயினோர் நடுவின் மாநுடப் பிறவியாய் வாழ்வா,
ரித்திற மாய வுருவமே விகாரி யானவி காரி
யென் றிவற்றை, மெய்த்திற ஞான வறிந்தவ
னறிந்த பொழுதிலே வீட்டின்ப மடைந்தான். 17

உடம்புட னிருந்தே யுரைத்தவிக் குணங்கண்
மூன்றையு முள்ளவா றறிந்து, கடந்தவன்
பிறப்பு மூப்பிறப் பாதி யாகவே கட்டுரைக்கின்ற,
விடம்புரை யிடும்பை யாவையுங் கடந்து வீட்

டின்பம் விளைபவ னென்றான், றடங்கட விடையே
உளர்ந்தவ னவற்கு வேறிது தநஞ்சய னுரைப்
பான். 18

கண்ணிய வுலகிற் கடப்பரி தாய குணங்களை
மூன் றையுங்கடந் தியர்ந்த, புண்ணிய ரியல்புங்
கடந்தறு நெறியுங் குறியையும் புகன்றரு
ளென்ன, வெண்ணிய வுலகு முலகில்வா ழுயிரு
மிருவினை யாகவையு மாகப், பண்ணியு மழிந்தது
மேவினை யாடும் பரமன்வே றிவ்வகை பணிப
பான். 19

டோய்மைய வல்லாக குணமவை மூன்றின்
காரிய மாய்வரு கின்ற, தூய்மையுந் தொழிலு
மயக்கமு மென்று சொல்லிய துறையிவை
மூன்றனு, சேய்மைய வென்று பெருந்தபோ
தவாவல் டெறறபோ திரங்கல்செய் யாதா,
னுப்போத மலனபோற் குணங்களோர டிருந்தே
யகற்றினுற் சலிததிடா னன்றே. 20

மாநமவ மாநம்வரு மின்பமிடர் மண்பொன்
னுணமகிழ் வப்பிரிய மன்பர்பகை யானே

ருணவரை யோடுபுக ழுற்றபொழு தொப்பா
னீனமுறு கின்றகுண மானவையி கந்தான். 21

இப்பரிசி னால்வருகு ணங்களை யிகந்தே
மெய்ப்பபருவ மாயபெரு வீடுபெறு கிற்பா
ரொப்பரிசி னாலுமிடை யின்றியெழு மன்பா
லொப்பவரி லாதவெனை யுன்னுமவர் கண்டாய்.

ஒழியா தென்று மியாவர்க்கு மியானே யுணர்த்தி வருதலாற், கிழியா வறிவுங் கெடா வீடும கேடி லின்ப மானதுவ, மழியா வறமு மென்னுள்ளே யளவா காகின் றனவென்றான, சுழியா நின்ற பெருவெள்ளத் திடையே பண்டு துயில்கொண்டான். 23

14. குணாதீத அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 404.

---

# 15. பிரபஞ்ச அத்தியாயம்.

சாயை யன்னவென் வினைத்தளை யறுக்கவோ தகவில், பேயை யின்னுயிர் செகுக்கவோ பிள்ளை யாய வளர்ந்தான், வேயை யொன்றிய வரிசிலை விசயற்கு மீள, மாயை தன்னையோர் மரமொக்க வருணைக்க ஊற்றான். 1

வேர்மேலது தலைகீழது வீவில்லது வேதத், தேர்மேவிய விலைமேவிய தியாவும்புக றவிஞ, வார்மேவிய வசுவத்தம தெனவேயா சதனின், பேர்மேயது பெருமாயைசெய் பிறவிப்பெரு மரமே. 2

இவ்வாறித னியல்பாகிய வகையா வெனி யாது, மொவ்வாவகை பெரிதாகிய பிரமத்துரு விடையே, வைவாளவலி யுழவாவரன் முறையே வரன்முறையே, மெய்வான்முதல் வருமாதலின் மேலானது வேரே. 3

ஊழால்வரு முலகாகிய முபிராகிய மெழலாற், கீழானது தலையாவறு முதலீறிடை கிளர்வாய்ச், சூழாகிய பிறவித்தொட ரொருகாலமு மடையப், பாழாம்வகை யழியாமையி லழியாததோர் படியே. 4

கருநாண்முதல் வினையாலது வளர்காதல் செய் தலினா, லருநான்மறை யவையேயிலை யவை யாமென வறிநீ, வருநாள்களி னொருநாள்பெறும் வகையின்மையி னாலே, பெருநாடறி யசுவத்தம தெனலாயது பெயரே. 5

மற்றிப்படி நிகழ்கின்றவிம் மாயாமர மிதனின், பெற்றித்திற மிதுவல்லது பிறிதின்மையி னாலே, யுற்றிப்படி யுணர்வார்பொரு ளெல்லாமுமு ணர்ந்தா, ரிற்றிப்பெரு மரத்தின்றிற மின்னுஞ் சில வுளகேள். 6

கண்ணேயெனை யனையாய்பல பிறவிக்கதி வழியே, மண்ணேமுதற் கீழாமுல கிடையேவளர் வனவும், விண்ணேமுதன் மேலாமுல கிடையே யிடை வனவு, மெண்ணேறிய பவமாகிய பணையா லிசை தருமே. 7

நெறியால்வரு தருவேர்பல நிலமாமுல கிடையே, யறியாமையொ டுறவீழ்தவில் வேர்கீழினு முளதாம், பிறியாதெழு குணமாகிய பெருநீரமை யில் வளரும், பொறியாகிய விலைவதாக்தளிர் போன்மேயது பொலிவே. 8

கனவத்திகழ் கழுதாழியு மிருகந்தர்வ நகரு, மெனவந்தழி தவினாலுரு வதுவின்றிய தியாது, முனம்வந்திடு முதனொடு முடிவினமையி னாலே, தனதந்தமு முதலுந்தெரி தாவில்லது தானே. 9

மந்திர மாய வித்த மாத்திரனைத் துறவென் கின்ற, தந்திர வாளால் வெட்டித் தற்பர மாகி நின்றே, யிந்திர சால மென்ன யாவையுங் காட்டு கிற்கு, மந்தமி லாத வெனனை யடைகையே யடுப வையா. 10

துன்னிய வாசை கோபங் கடந்தவர் காணத் தோன்று, மென்னுரு வியற்கை கேட்கி வியாவை யங் காட்டு கின்ற, மன்னிய வொளிகள் காணா வகையதாய் வந்து சேர்ந்தார், பின்னியல் கேளொன் றுகாப் பெற்றிய னென்று பேசும். 11

குடந்தொறுந் தோன்று கின்ற காயமுங் குலைதற் கேற்பத், தடம்பன றேறுந் தோன்றுஞ் சந்திரன் றனு மென்ன, வடம்புக டோறும் வேறு யுயிரென நின்றே யந்த, விடம்படு புலன்க ளாறு மியல்பினி வியற்று வேனான். 12

பூக்கமழ் நாற்றங் கொண்டு பொருவளி
போகு மாபோற, நீககனல் கின்ற வேலோய்
சீவனென் கின்ற சீரோ, னாக்கையை யெய்தும்
போது மதனைவிட் டேகும் போதும், போககரி
தாய வாறு புலன்களைக கொண்டு போமால். 13

மின்னே யனைய வுடம்பதனை விடுவ தடைவ
தாய்விடயங், தன்னே ரில்லா தான்றானே யார்
கின் றானத் தன்மையினை, யென்னே காணா
ரறியாதா ரறிவா ரியோகத் தாலேதம், முன்னே
காண்ப ரிதனியற்கை தெளிநீ பின்னா மொழி
வன்கேள். 14

இந்தியங் களுக்குங் கண்ணா னிரவிதீ யிந்து
வின்பால், வந்தெழு கதிரு ளானே மாகில மாகி
நின்றே, கந்தியன் றனைய தோளாய் கந்தமே
முதலாந் தன்மை, தந்துராந் தரிததீ தெல்லாந்
தாங்குகின் றேனா னானே. 15

மூந்து வான்சுவை மூர்த்த மாகிய
விந்து வாகிநின் றாணவி யாவினுக்

தந்து சேர்சவை தகவ வற்றிலே
கந்தி டாவகை வளர்க்கின் றேனுநான். 16

தின்ப நக்குவ சவைப்ப வுண்பவாய்
நன்ப யன்செய நால்வகை யுண்டியு
மின்ப மாம்வகை யாக்கைக டோறுமின்
றன்ப வங்கியா யறுக்கின் றேனுநான். 17

நல்ல மாக்தர்கல் லறிவ நன்கிலாப்
புல்லர் தங்கள்புல் லறிவும் போர்திகழ்
வில்ல மைந்ததோள் வீரர் வீரயா
வல்ல தில்லையென் றறிய வேண்டுமே. 18

அசைவி னான்மறை யறிவ னானதன்
வசையி லாதமெய்ப் பொருளும் வாய்மைசே
ரிசையி னொடெடுத் தோது வேனுநான்
விசைய கேளினும் வேறு மொன்றையே. 19

மருவு கின்றவிவ் வுலகின் மாய்தலே
யருவ மாகமுன் புடைய தொன்றுமே
யருவ மொன்றினா லழிவ தின்மையே
பொருவு கின்றதோர் பொருளு முண்டரோ. 20

மொழிசெய் கின்றவிவ் விரண்டு முற்றவே
விழியு ளுலுற கோசகின் மெய்ம்மையே,
யழிவ தாக்கையாக கழிவு பாடிலா
தொழிவ தென்னெனி னுயிரென் கின்றதே. 21

இவைவி ரண்டையுங் கடந்தி யாதுமோர்
நவையு மின்றியே நாச மினறியே
யெவையு மின்றியே யிழிவு மின்றியே
குவையி னின்றதோர் குறியி லின்பமே. 22

இந்த வின்பமா மென்னே யுள்ளவா
சிந்தை யின்கணே தெளிதன் மேயினர்
பந்த மொன்றிலார் பழைய விப்பொருட்
கந்த மாதிவே றறிய வொண்ணுமோ. 23

வேத நாலுகின் றுரைசெய் தாலுமொன்
றோத லாவதன் றுலக நிந்ததோ
காத லாலெனக கினிய தோழனீ
யாத லாலுனக கறிய வோதினேன். 24

கண்ணேயோ ரிடத்து மின்றி யதனிலே வைக்கிற் காதற், பண்ணேயோ டாககுகின்ற வினை

யோரம் பயக்கு மென்ருன், வெண்ணெயோ
விதுர னிட்ட விருந்தையோ வேலை சூழ்ந்த,
மணையோ வுண்டு முன்னுன் வருபசி தீர்ந்த
மாயோன். 25

15. பிரபத்தி அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 429.

## 16. தேவாசுர சம்பத்து விபாக யோக அத்தியாயம்.



மறந்தி ருந்தம னத்திரு ணீங்கிடத்
திறந்தி றப்படச் செப்பதன் மேயினை
னறந்தி றந்தெரிந் தாககுதற் காகவே
பறந்தி றந்துழல் கின்றபே ராளனே. 1

தெய்வ வாசுர ரென்றிந்தி றத்தராய்
வைய மாந்தரெல் லார்களும் வாழ்வரிங்
கைய கேளவர் தந்திற மென்றுதன்
செய்ய வாய்திறந் திவ்வண்ணஞ் செப்புவான். 2

*அஞ்சுத லின்மையு மறிவை யாககலு
நெஞ்சினை யடககலு நிலைகெ டாமையும்
வெஞ்சின மின்மையு மெய்ம்மை கூறலுந்
தஞ்சென கேள்வியுந் தவமு மாககலும்.* 3

*மறைபயி றலுந்தனை மதித்தி ராமையுங்
குரளைக டவிர்தலுங் கொல்கை மாற்றலும்
பிறர்பிழை பொறுத்தலும் பேரா ழுக்கமு
மறன்ஒவித தானமோ டருளை யாககலும்.* 4

*இருவகைத் தூய்மையு மிந்தி யங்களை
யொருவழிப் படுத்தலு முள்ளிட் டன்னவை
செருவருஞ் சிலையினுய் தெய்வத் தன்மையோர்
மருவிய தொழிலென மதிகக மேண்டுமே.* 5

*தீமைசெய் யசுர ராஞோர் செய்கையைத்
தெரிககி லொன்றை, யாமவகை யெனமற் ருகா
தனவென வறித லில்லார், தூய்மையர் தூய
வாய வொழுககமுந் தொடககு விட்டார், வாய்
மையொன் றானு மில்லார் மயககமே மருவா
நின்றார்.* 6

பிறந்துபே ராசையாய பாசத்தாற் பிணிக்கப் பட்டார். 10

இப்பொரு ளடைந்தோம் வேறு பொருளினி யடைவோ மென்று, மிப்பகை செகுத்தோம் வேறு பகையினிச் செகுப்போ மென்றுந், துய்ப் பவ ரெம்மிற் றுய்க்க வல்லவ ரில்லை யென்று, மொப்பவ ரெம்மின் மிக்கா ருளர்கொலென் றுணரா நிற்பார். 11

ஈசுவலி யின்பம் பெற்றோ மெம்மின்மிக் காரக ளில்லைத், தனமிக வுடையே மென்றுந் தம்மைய வியவா நிற்பார், மகமகி ழியாகஞ் செய்வோ மழையெனக் கொடுப்போ மென்று, திரமவை தோறுஞ் சிந்திப் பதுவலாற் செய்வ தில்லார். 12

தொடக்கற வில்லா நினைவெனப் பட்ட குழலைப் பற்றியே சுழல்வா, ரடக்கரி தாய மடகக மென் கின்ற வலைபலை யகப்பட்டு நின்று, குடற் றுடில் லொழுவாம் பன்னுனிப் பனிநீ ருலர்த்திடு முபிராணக கெப்பிக், கடப்பரி தாய ராகமெர் காற கடல்களில் வீழ்கெ கடார். 13

அத்தியாயம்.

ஒருவனை சிக்கவி யற்றுவ தென்று
மருநா கத்தில டைப்பது தானும்
வரும்வழி மூன்றுள மற்றவை தம்மை
யொருமுறை கூறியு ணர்த்திடு வன்சேன். 18

காதலி னாகிய காமமும் லோபங்
கோதுற வேசுடு தீங்கர் கோப
மாதலி னிவ்வவை மூன்றும கன்றார்
வேதனை தீரபெரு வீடுவி ளைந்தார். 19

கூறின நூல்வழி சேர்குறி பேணு
தேறின வாறுசெய் வாரிக லோகம்
வேறிய லார்பர லோகம்வி ளைக்கும்
பேறின வானவை பேறுபெ றுவரால். 20

ஆதலில னைத்துமறி கைக்குவழி யான
வேதமுத லாகவைவி தித்தநெறி யாலே
யேதமினை யாதுன்வினை யேயிசைக வென்றான்
பூதமுத லானவைபொ றுத்தருளு கின்றான். 21

16. தேவாசுர சம்பத்து விபாக யோக
அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 450.

---

அடக்கிட லக்கர மாதி யின்றியே
யிடம்படு நூல்களி னிடம்ப தின்றியே
யுடம்பைய முயிரை மடக்கு மாதவர்
தொடங்கின ராசயோ கியினிற் றோன்றினர். 5

உண்பன வாக மாறு முறைதக் காரமென்னா,
கொண்பட வுரைத்த நான்கு மோரொன்று
மூன்றுட னிலற, பண்படு குணங்க ளாலே
கேளெனப் பற்று வீடு, நண்பொடு பகைய
மிவையொன் முறையினா லவிர்ந் துற்றன. 6

சத்துவ குணத்தோ ருண்டி யுரைத்திடி லழுகு
சார்ந்து, தித்தித்த சுவைய தாகி நெய்தருச்சிக
கொண்டு சேர்த்து, பத்தித்து வல்நோ யின்மை
யறிவுநல் லாயு ளின்பம், வுதவிக்கச் செய்யு மிக்க
வுணவுகள் மடக்க லன்றும். 7

இப்படி யன்றி வேறு மிராசத குணவ கேட்கிற்,
கைப்பன புளிப்ப வுர்ப்புக கூர்ப்பன கடு
வெய்து, செய்ப்பயி னெருப்பப் போலச் சுடுவன
விகற்றி னுலே, மெய்ப்படு நோய நெஞ்சத
திடும்பையும் விளைவ வேலோய். 8

ஆசினை யடைந்த நெஞ்சிற் றாமத குணவு
கேட்கி, லூசின பழஞ்சோ றெச்சி லும்பர்பூ
சனைக்கா காமை, யேசின வெந்தி லாத வினையன
வியற்றி னேலே, காட்சின முதலா யுள்ள துய
ரெலாம் விளைவ கண்டாய். 9

செயத்தகு வனவென் றல்லாற் சேர்பயன்
சிந்தி யாதே; நடக்கநூன முறைசெய் யாகஞ்
சாத்திகஞ் சாரி யாகம், பயத்தையே வேண்டி
யாதல் பலர்புகழ் வேண்டி யாத, வியற்றுறும்
டாக மெல்லா மிராசத யாக மாமே. 10

நூட்டு நெறிய யின்றி நனித்தவவ் வினையின்
மேலோர, தாற்பரி யமுமே யின்றித் தககமந்
திரமு மின்றி, யேற்பவர்க கீத லின்றி யியற்றுறு
கின்ற யாகந், தார்ப்பொலி கின்ற மார்பா தாமத
யாக மாமே. 11

தீக்குலாம் வேலினாய் தவத்தின் செய்கைதான்
வாககினாற் பேசுதன் மாத்தி ரைக்குத
லாகசயா வியற்றுத லாயி ருப்பது
கோகினு னிவற்றினை நனித்துக் கூறுவாம். 12

தீர்த்த யார்க்குஞ்செ விக்கினி தாயின
வார்த்தை மாமருந் தேயென லாவதா
மோர்த்து மெய்ம்மொழி கூறுத லோதுதல்
வார்த்தை யாற்பண்ணு மாதவ மாகதே. 13

தெளிவி னெஞ்சைத்தெ ளிப்பி டித்தலுங்
களிசெ யம்முளத் தைக்களி மாற்றலுங்
குளிர்வி லாமைய ளத்திற்கொ ளாமையு
மெளிதின் மாகத மாதவ மென்பதே. 14

தலைமை யந்தணர் தேவர்கு ரவர்பான்
மலைத லின்றிவ ழிபடு வாழ்க்கையுங்
கொலைது றத்தலுங் காமகு றைத்தலுந்
தலைவ காயத்த வமெனப் பட்டதே. 15

இத்தவமும் வடிவேலோய் செப்பியவிம் மூன் றுலுஞ், சாத்துவிக மகிழ்வெய்தச் செய்கின்ற வருந்தவத்தி, லாத்துவரும் பயன்வேண்டா தாகின்ற வருந்தவந்தான், சாத்துவிக தவ மென்று சாற்றுவது தக்கோரே. 16

வசையிறவ முடையோன மாதுடர்கொண் டாடுகைக்கு, நசையினெடு பொருள்பெறவுஞ்

காதலா லிந்தப் பதங்கண்மூன் றிணையங் கற்று
ணர்க் தவர்கடங் கருத்தா, லோதலாம் வகையா
லுரைத்தலாற் றவமுந் தானமு முதலிய வொழி
யா, ஈதலா லிந்தப் பதங்களை யுரைத்தே வினை
செய்த தருவதென் றுரைத்தான், றீதிலா வுலகத்
தன்னுளே யுதிப்பத் தேவகி திருவயிற் றுதித்
தோன். 25

17. குண விகார அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 475.

## 18. சங்க்ஷேப அத்தியாயம்.

ஏகமே கருதுவா ரிதயமே விளைவதோர்,
போகமே யுலகிலோர் பொருவிலா வொருவனே,
நாகமே மணியாய் நளினமே மலர்வதோர், மேக
மே பணியெனு விசயன்மேல் வினவுவான். 1

சத்தி யாச மாவதுந் தகுத்தி யாக மாவது,
மெஞ்ஞானி யாய மாகவெம்பி ரானியம்பு கென்
னவே, வக்கி வாயு வாகமாகி மண்ணுநீரு மாகி

யோன், றெண்மை யாம்போ ருட்டோரைத்தி
றஞ்சொலத்தொ டங்கிறேன். 2

காம மென்றி டும்ப லன்செய் கன்ம மான
யாவையுந், காம டங்க வேவி கத்தல் சந்நியாச
மாவதிங், கேம மின்றி டெவ்வி னைப்ப யன்களான
யாவையுந், தீமை யென்ற றத்து ழைத்தி ருத்தறி
யாக மாவதே 3

'யற்று இன்றதீவி னைதி ரட்கள் போல
வே, யீங்கி யற்று இன்றநல்வி னைத்தி றக்க
ளியானவைய, மாங்கி யற்ற வின்றிவிட்டி ருந்த
லே யருந்தமாச, சாங்கி யத்தை யோதி னேந்த
வைத்துளோரு ரைப்பரால். 4

ஞான காரணங்க ளாத லாலி யாக நற்றவந்,
தான மோடி கத்த லைத்த காமை கூறு வாறன,
ஞான காரணத்தி னால நித்த டங்கி னோக்கமா,
லீன மாகு மேனை யோர்கள் வேற்றை விட்டி
ருத்தலே. 5

தியாக மூன்றுவ கைப்படுஞ் செப்பக்கே
ளியாக முந்தவந் தாநமு மென்றிவை

ஆன்ற வறிவுங் கருமமுமக் கருமக் கவைடாக
கிடுமாறு, மூன்ற வணரும் பதத்தொடு திருத்தி
யென்ன வுரைப்பனவுந், தோன்ற விவைட மச்மு
மூன் சொன்ன குணத்திற் றொடாபாலே,
மூன்று வகையா மொரோவொன்றிங் கவற்றின்
றிறநான் மொழிவகேள. 19

நன்றாய் ஞானத் திரளாகி நாநா விதமாய்
விரிந்திருக்கும் பொன்று நின்ற பூதங்க ளோடும்
பொன்றாப் பொருளாகி. டொன்றாய் நிற்ப
தொன்றினையப் படியே யுணரு முணர்வதனை,
யன்று மென்னர் சாத்துவிக ஞான மெனவே
யமைப்பாரால் 20

ஊனப் படும்வ் வுடலோறு முள்ள பொருளை
யுணராதே, யீனப் படக்காண் கின்றதிரா சதமா
ஞான மதுவன்றி, ஞானத் திரளாய் நிற்றலைத்
தோ ருடம்பி னிடைய காட்டிடையோர, தாநத்
திடையு மடங்கக்காண் பதுதா மதமா ஞானமே.

வீதலிற் பற்று மேலோர் விளைப்பாம் பேண்
டல் வேண்டாக, காயத்திலொன் றின்றிச் செய்ய
கருமஞ்சாத் துவிக கன்ம, மாயவரும் பலத்தி

துன்ப மாய்விடம் போன்றுதொ டக்கத்தி
லின்ப மாகிவி ளைவிட மியாவர்க்கு
மன்ப வாரமு தேயென லாவதா
மென்ப சாத்துவி கந்தரு மின்பமே. 32

பொருத்த மாய்ப்புல ஞேடுபொ றியிலே
யருத்த மாயெழுந் தாரமு தென்னலாய்
விருத்த மாயமுடி வில்விட மாகியே
யிருத்த லாகுமி ராசத வின்பமே. 33

தொடரு றககம யக்கொடு சோம்பிஞற்
படவு தித்ததாய்ப் பண்ணும்பொ ழுதினு
கடன்வி ளைந்துமு டிந்தகா லத்தினு
மிடர்வி ளைப்பது தாமத வின்பமே. 34

இந்தவியற் கையினுமிக் குணங்களைவிட் டவ ரில்லை, யந்தணர்க்கு மரசர்க்கும் வணிகர்க்குஞ் சூத்திரர்க்குந், தந்தமியற் கையவாய குணமூன் றின் றன்மையினில, வந்தவினைத் திறமவற்றை யறைபவன்கேண் முடிமன்னே. 35

கறைசெயைம் புலன்களைக கரண ஙானகுடன்
றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்

பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமு
மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே. 36

தலைமையுங் கொடையொடு தறுக ணாண்மையு
நிலைமையுங் கீழ்ப்படா நெஞ்சி னீட்டமுங்
கொலைபயில் போர்களிற் புறங்கொ டாமையுஞ்
சிலைமலி தோளினா யரசர் செய்கையே. 37

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிகம்
வழுவறச் செய்கையே வணிகர் வாழ்க்கையாம்
பழுதற விவர்களைப் பாது காத்தலே
விழுமிய தொழில்கள்வே ளாளர்க் கென்பவே. 38

தீரா வகைதஞ் செயலே செயவே
நாரா யணனா முதனா யகனாக
காரா தனையா மதனா லவனே
வாரா வழியாம் வரமே தருமால். 39

அல்லா வினைதா னழகாய வரினுஞ்
செல்லார் பெரியோ ரவைசெய் வதனிற்
றொல்லார் குலமே தொடருந் தொழிலே
பொல்லா வெனினுஞ் செயலே பொருளே. 40

கனையெரி புகையோ டன்றிக் காணமுன் படாமை போல, வினைகளுங் குற்றந் தன்னை விட்டிரா வாத லாலே, யனையவென் றிகழ்த லாகா தடுததகா ரியங்க டம்மை, நினைவருந் தரும மென்று செய்கையே நீதி யெல்லாம். 41

வெச்லப் பட்ட மகத்தினாய் வேறொன் றினையும் வேண்டாதே, யல்லற்படுக்கு முடற் பற்று மறவே யறுத்தான் வினையடையச், செல்லச் செல்ல வறுத்தாஞ மதனுற் சித்த முடிவாகச், சொல்லப் பட்ட காணங்க ளைன்குந் தூய்தாய் விடுமன்றே. 42

சொன்ன காண மவைநான்குந் தூய்தாய் விடவத் தூய்மையினு, லுன்ன வரிய பெரும் பொறையை யுடைய ஞகு மப்பொறையா, லின்னல் செய்யும் பொறியைந்து மிராகத துவேஷ மெனுமிரண்டு, மன்ன தன்னை நலி யாமை மாற்று மவற்றை மாற்றிஞல். 43

காடு மலையு மலமுழைஞ்சுங் கடுமா முதல நலிவில்லா, வோடும் புனலா றள்ளிட்ட விடவே டுறைபு ளாக்கொண்டு, தேடும் பொருளொன்

றின்றியே சிறிதே யுண்டு சென்றெங்கு, மாடு
மாவாய் மொழியாக்கை யடங்கப் பெறுமா
லவனையா. 44

சொன்ன வினைவபோ யடங்கிடவே தோன்றுங்
களிப்புங் காமமுமுன், பென்ன தியானென்
கின்றதவு மெரிபோல் வெகுளி யொடுவலியு,
முன்ன றவிர்ந்து சாந்திபெறுஞ் சாந்தி பெறவே
யோரிடத்தும், பின்ன மடையா தொன்றாகி
நின்ற பொருளின் பேருருவாம். 45

அந்த வுருவா னவன்பின்னை யாதே வரினு
மழிவறு, னிந்த வுலகத் துயிர்க்கெல்லா மொத
தே யிருககு மீங்கிவனும், பந்த மறவிட் டெனே
யறியும் பததி பெறுமப் பத்தியினாற், சிந்தை
யிடையே யெனைத்தெளிபு மதனு லெனையே
சேருமால். 46

என்னைப் பற்றிக் கொடுகின்றே யெல்லா
வினையு மியற்றினாற், பின்னைப் பிறவாப் பெரும்
பதமென் னருளி னாலே பெறுங்கணடாய்,
கின்னைத் தொடரும் வினையெல்லா மென்னை

நினைந்தே செயில்வினைக, டன்னைக் கடத்தற்
கருந்துன்ப மெல்லாங் கடக்கத் தகுதியால். 47

ஒன்றிய மாத்தி ளுலே யானுரைக் கின்ற
வுண்மை, நன்றிதென் றுணரா யாயி னுசமே
யடைதி மற்றீ, தன்றியு மாசர்க கெல்லா மடுத்த
கா ரியமா யுள்ள, வென்றிமை யடையா நிற்கு
வேறினி வினை வ கேளாய். 48

விரைசெய் தார்மன்ன வேண்டலை யாயினுங்
கரைசெய மாயையுங் காலுற வாழ்த்திடு
மாசர் தங்குண மாகிய வாண்மையே
புரைசெய வாளமர்க கேபுகு விககுமால் 49

பொறிக ளுண்ணின்ற வற்றின்பு ணர்ப்பெலா
மறிய வாட்டினன் போலாக்கை கடொறு
மறைவி னினறுதன் மாயையி னுல்வினைக
குறிகள் செய்விப்ப னீசனென் றேகொள்வாய்.50

வேறப் பாலொரு வர்ககும்வி ளம்புதன்
மாறப் பட்டபொ ருளினவ கையெலாங்
கூறப் பட்டது னககிககு றிகளை
யேறப் பார்த்துனக கேறிய வாசெய்வாய். 51

தீதகலா தெனவுளவோ விவன்வேண்டி
லெனதேறி, யோதலினா னினைத்தலினா
லெனைப்போக்கி யொன்றறியா, யாதலினால்
யாவர்களு மறியாத வொருபொருளைக், காதலினா
லுனக்கின்று முரைக்கின்றேன் கடைப்பிடிநீ. 52

என்னையே நினைந்தெழவுன் மனத்தினையென்
னிடையேவை, யென்னையே நினைந்திருநீ மற்றெ
னக்கே பூசனைசெ, யென்னையே குருவாக்கொள
ளெப்போது மிதுசெய்யி, லென்னையே வந்
தடைதி யிதுமெய்யே யிதுமெயயே. 53

இருவேறு வகையாய வெவ்வேறு வினைகளையு,
மருவேனென் றறவிட்டு மாயையினான் மறைப்
பரிய, வொருவெனையே பற்றுதியப் பற்றினா
லுனைப்பிறவிக, கருவேலை கடந்தேறக் கைதரு
வேன் கதிர்வேலோய். 54

மற்றுனக்குச் சொல்லியவிம் மறைப்பொருண்
மா தவமிலர்க்குங், குற்றமறுத் தறிவருளுங்
குருவழிபா டிலாதவர்க்குஞ், செற்றமாச் சழக
காககு மெனைநினையாத் திறத்தவர்க்கு, மற்ற
மறத தெரிந்துரைக்கை யடாதென்றே யறி
கண்டாய். 55

எல்லாப் பொருட்கும் பரமாமிப் பொருளை யென்னன் பர்ககிசையச். சொலலாற் றெரிவிப் பவரென்பா லன்ப தன்னி யெனையடைவர், நல்லார் களின்மற றெனககினிய நன்மை செய இன் ருருமவ, ரல்லா தவரிப் பொழுதுமிலை மேலு மவாக ஞளாராகார். 56

எய விருவோம் பேசியவிவ் வறனூ வினையே யெடுத்துரைப்பா, ஞய ஞாந யாகததா லெனை யே யாரா திக்கின்றன், மேய பொறுமை தனை விட்டு விருப்பா விதனைக கேட்பானுந், தீய வினைக ளறவிட்டுத தேவ ருலகஞ் சேருமால். 57

என்னது மொழியி ஞலியா னியம்பிய ஞாநத் தாலே, மனனவ வுனககு வந்த மயககெலாங கெட்ட தோயான், சொன்னவிப் பொருள்க ளெல்லாந் துணிந்தனை கொல்லோ வென்று, நன்னகை கூர நின்று நாயக னருளிச் செய்தான். 58

மன்னவவென் மாயமது சூதமறை நாவின்
மூன்னவமொ ழிந்ததிரு வாய்மொழிக ளாலே
யென்னகுறை யுண்டினியெ னக்கெனவி யம்பித
தன்னகம கிழ்ந்திவைத நஞ்சயனு ரைப்பான். 59

வையமுழு துண்டதிரு வாய்மலர்தி றந்திட்
டுய்யவடி யேன்முனுரை செய்தவுரை யாலே
யையமொடு மோகமற விட்டெனறி வுற்றேன்
செய்வதினி யுன்றனரு ளின்செயல்க ளன்றோ.60

பையரவி லேயினிது பள்ளியமர் வோனே
வையமுமிவ் வையமதின் மன்னுயிர்க ளியாவுஞ்
செய்யும்வகை யுற்றதுசி தைத்தலது தானு
மெய்தெரியி னீமுன்விளை யாடும்வகை யன்றோ.

அணித்தகைய சோதியம லாவுனரு ளாலே
கணித்தலரி தாயபிற விக்கடல்க டந்தேன்
பிணித்தபெரு மாயைமயல் கெட்டதுபி ரானே
பணித்தபணி யல்லதுசெ யத்தகுவ துண்டோ.62

பிணித்த பிறவிப் பெருந்தளையைப் பெயர்த்தென் பெரும்பேதைமைநோயைக், தணித்த வரசே யெனக்குத்தான் றகுமே யாகத் தகாதாகத், துணிதத திறல்வான் போரினையே தொடங்கு கென்று நீயிங்குப், பணித்த பணியான் செய்வனெனப் பார்த்த னவனு முடன்பட்டான்.

மாதவனுந் தனஞ்சயனுந் தங்களிலே மகிழ்ந்துரைத்த, வோதரிய பொருளினைநீ யுணர்ந்த

வா றெங்ஙனெனில், வேதவியா தன்னுடைய மெய்யருளை மிகவுடையே, னாதலினா லறிந்தனன் வே றறியலாம் வகையுண்டோ. 64

அப்பொருளை நினைதோறு மற்புதமா மக மகிழ்வு, மெய்ப்புளகும் வருமவன்றா னிருககின்ற வகைவிரித்த, வொப்பரிய திருககோல முணர் தோறு முணர்தோறுஞ், செப்பரிய பெருங்களிப் பென் சிந்தையுளே திகழுமால். 65

எஞ்சலிலாப் பொருளனைத்து மிப்படியே புகுந்தெனச், சஞ்சயனன றெடுத்துரைதனு நூற்றுவர்க்குத் தாதையோய், வஞ்சனையே கண்ணாக வாழ்கின்ற மற்றவர்க்குப், பஞ்சவரே வலியவரென் றிவ்வண்ணம் பகர்வுற்றான். 66

திருவற நீதிசெ யம்புக ழெல்லா
மருவரு மாயைசெய் மாதவன் வாய்மை
தருமம்வி டாதத நஞ்சய னென்னு
மிருவரு நின்றவி டத்தன வென்றான். 67

என்றபொ ருட்டிற மிப்படி யேயாக
குன்றமெ டுத்தருள் கொண்டல்ப ணிப்பான்

வென்றபு லத்துவி யாதன்வி ரிப்பா
னின்றவ ருககிது சேர்பட வற்றே. 68

வேத நூல்களின் முடிவினை வியாதனிற் பின்னு, ளோத மாககட லுலகிலுண் டாககிய வரவோன், கோதி லாநெறி யுணாந்தகோ விந்தமா முனிவன், பாத தாமரை பற்றிவீட் டின்பமே படைத்தான். 69

ஆற்றியல் வழுவிய புலன்க ளோந்தையும்
பாற்றிய சங்கர பகவற் பாதனென்
றேற்றிய பெயரினு னருளி னுவியான்
சாற்றின னிப்பெருந் தரும நூலையே. 70

18. சங்க்ஷேப அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 545.

பரமார்த்த தரிசனம் என்னும்

பகவற் கீதை

முற்றிற்று

---

உ

சிவமயம்.

# பகவற் கீதை 545 பாட்டு முதற் குறிப் பகராதி.

பகவற் கீதை பாட்டு முதற் குறிப் பகராதி

முற்றும் ஆக அத்தியாயம் 18. கவி 545.

ஆக எழுத்து 69.

சுபம்.



# பகவற் கீதை.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 32 | 7 | வகையினை | வகைவினை |
| 55 | 10 | பலன் | புலன் |
| 69 | 12 | வலலதி | வல்லதி |
| 73 | 8 | மெய தெளிய மாறும் | மெய்தெளியு மாறும் |
| 74 | 15 | யறையககேள | யறையக்கேள் |
| 78 | 2 | வியோமே | வியோகமே |
| 86 | 4 | களிப்பாா | களிப்பார் |
| ,, | 11 | பற்றறுவிபப | பற்றறுவிப்ப |
| 88 | 7 | மறைகளிளி | மறைகளினி |
| ,, | 10 | சஙகரனு | சங்கரனு |
| 91 | 17 | சொல்லு | செரல்லு |
| 96 | 10 | வீழககண்டேன் | வீழக்கண்டேன் |
| 128 | 9 | ணீ | ணீங்கிடத் |
| ,, | 10 | | மேயினு |



திருப் பூ வண மடாதிபதி, சத சாஸ்திர கர்த்தா,

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன.

| | | |
|---|---|---|
| 1. | விசார சாகரம் வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு ரூ. | 2—4 |
| 2. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். ,, | 2—8 |
| 3. | கதா சரித் சாகரம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு | 2—4 |
| 4. | நைஷ்க் கர்ம்ய சித்தி. வசநம். ,, | 0—8 |
| 5. | வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம். ,, | 0—8 |
| 6. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். ,, | 0—8 |
| 7. | வேதாந்த பரிபாஷை. வசநம். ,, | 0—7 |
| 8. | ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். ,, | 0—4 |
| 9. | மண்டல பிராஹ்மண உபநிஷத் - ராஜ யோக பாஷ்யம் ,, | 0—4 |
| 10. | ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம். வசநம். ,, | 0—4 |
| 11. | ஹரி மீடே - ஹரி தத்வ முக்தாவலி. வசநம். ,, | 0-12 |
| 12. | வேதாந்த சஞ்ஞா. வசநம். ,, | 0—2 |
| 13. | பகவற் கீதை 15-வது அத்தியாயம் சுலோகம் உரை தமிழ்க் கவி உரை. மூர்க்க சதகம். பத உரை | 0—8 |

14. நாநா ஜீவ வாதக் கட்டளை-சத்யார்த்தப் பிரகாசிகை உரை 2—0
15. கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை 2—0
16. மகா ராஜத் துறவு - மகப் பிரசாதினி உரை 2—0
17. பக்தி (வைராக்ய) சதக பத உரை பொழிப புரை 1—8
18 வைராக்கிய தீபம். பத உரை - பொழிப் புரை. 0—8
19. சிடாசாரம் - பால போதினி உரை 0—8
20. கீதா சாரத் தாலாட்டு - குறிப் புரை 0—4
21. பக்தி சதகத் தோத்திரம் - தோத்திரப் பிரகாச உரை 0—3
22. மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி 0—8
23. மந்திரோபதேசம். 8 மந்திரங்கள் உரை [கட்டாரி புச்சம்) 0—4
24. தாந்திரீக த்வைத சைவ கண்டநம். (சூட்டுகோல் 1—0
25. வேதாந்த சாஸ்திர ரத்நாவலி. 9 சேர்ந்தது 3—0
26. பஞ்சதசி கவி 0—10. 27. வாசிட்டம் கவி 2—4
28. விவேக சூடாமணி-அஞ்ஞ வதைப் பரணி கவி [கீதை கவி) 1—0
29. கீதாத திரயம் (ஈசுவர கீதை. பகவற் கீதை பிரஹ்ம 3—0
30. திருக் களர் வீரசேகர ஞாந தேசிகர் சரிதம். வசநம். 1—0
31. கைவல்ய நவநீதம் கவி 0—9. 32. ஈசுவர கீதை கவி 0—4

உ

ஸ்ரீ வியாச பகவான்
சம்ஸ்கிருதத்தில் இயற்றிய

ஸ்காந்தப் புராணத்துள்ள
சூத சம்ஹிதையில

# (சொரூபாநந்த சித்தி)
# பிரஹ்ம கீதை.

---

இருமபூதூர்
ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகளால்

தமிழில செய்யுள் வடிவமாக
மொழிபெயர்க்கப்பட்டு

திருப்பூவண மடாதிபதி
ஸ்ரீ காசிகாநந்த ஞானாசார்ய ஸ்வாமிகள்
அவர்களால்

மதுரை, கருணைநிதி பிரசில் பதிப்பிக்கப்பட்டது

காப்பிரைட்]　　1958　　[விலை ரூ 1.-

# முக வுரை.



மக்கள் யாக்கையைப் பெற்ற ஜீவர்கள், பந்தம் நீங்கி முத்தி பெற வேண்டும் என்னும் கருணையினால், ஸ்ரீ வியாச பகவான் 18 புராணங்களைச் செய்தனர். பின்னர் உப புராணம் பதினெட்டுஞ் செய்தார்கள். உபபுராணத்தில் அடங்கியது, ஒரு லக்ஷம் சுலோகம் உடையதாய், ஆறு சம்ஹிதை உடையதாய். உள்ள ஸ்காந்தம் என்னும் புராணமாம் அதன்கண், சூத சம்ஹிதை என ஒரு சம்ஹிதை இருக்கின்றது. அதில், யஞ்ஞ வைபவ கண்டம் என ஒரு கண்டம் இருக்கிறது. அதனுள் பிரஹ்ம கீதை என 12 அத்தியாயத்தில் 1015 சுலோகத்தில் பிரஹ்மா தேவர்கட்குபதேசித்ததாக ஒரு நூல் இருக்கின்றது. அவை புராணம் வேதப் பொருளை விளக்குவன ஆம்.

இந்தச் சூத சம்ஹிதையில் வியாச பகவானது அபிப்பிராயம் யாவும் சூத முனிவரரால் விளக்கப் பட்டிருக்கின்றது என கூறப்படுகின்றது

இந்தச் சூத சம்ஹிதையை, சிவ அவதாரமாகத் குரு ஸ்ரீசங்கராச்சார்ய ஸ்வாமிகள் வியாசபகவானது உள்ளக்கிடக்கையை அறிந்து கொண்டு நம்போட்டுப் பதினொன் முறை மீண்டும் மீண்டும் பார்த்தார்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இவ் வித அருமை வாய்ந்த பிரஹ்ம கீதை என்னும் நூலை, இரும்பூதூரில் சமாதி யுற்றிலங்கும் ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகள் 547 கவிகளில் தமிழில் மொழி பெயர்த்திருக்கின்றார்கள். இதனை தமிழில் இயற்றி முந்நூறு வருடங்கட்குமேல் இருக்கலாம்.

இத் தமிழ்க் கவிக்கு, கோடக நல்லூர் சுந்தர ஸ்வாமிகள் ஓர் உரையும், சிதம்பரம் ஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிக ஸ்வாமிகளவர்கள் விடாக்டாக ரூப ஓர் உரையும் செய்திருக்கின்றார்கள்.

இக் கவியினை மட்டும் படிப்பவர்கட்கு உபயோக மாகும் பொருட்டு டப்ள் கிரௌன் 1/32 பேஜ் சைஸில் சிறிதாகப் பாக்கட்டில் வைத்துக் கொள்ளும்படியாக அச்சிட்டிருக்கின்றோம்.

திருப் பூவணம், வேதாந்த மடம்.

உ
சிவமயம்

# பிரம கீதை

## 547 பாக்களின் தலைப்புக் கவி-14.

## 14 சீர் ஆசிரிய விருத்தம்.

1. சொல்-இரவி கண்-முன்னை நித்த-மயல் தாறு-மன் வான்-சந்தே அன்பி, தாதா-சூதறு வேத-இன் மறை-பண்டு பாவ-சக ஐம் - இந்துவளமா-பூர்ண, பல்-சித்தி வெடி-மேவி மத்த-கற் பக ஆர நித்த-தம கஞ்ச ன-அமுத் பரம-அடை அசி-வேத தோத்-ஈச அன்-பத்தி யா-முப்பா ஞென்ப தாகும், துல-மறை கள் சித்-அந்த பர-வானி தத்-காத வான்-பொருள் வேத மோதி-சொல்லுரு கனவிற்கற் போதக்கண் கனவிற்கண் வேதநெறி தண்ணி வேதம். அல-மைய காது-தருமம் முன்னை துட்டரு அவத்த-இரு பந்தி ரண்டாம்-அமர் ஐத ரேய-உப நிஷதார்த்தம் உரை அத்தி யாயபிரண் டாவ தோவே

2 ஓவ-றுன் றுவ(து)தற் பர சான்ற உலகெலாம் பானரு உலகு தொல்லை ஒதநெறி நிகிலமோ தெரி-விலா அன்றியது ஆகலால் சிலவர் தாமி, வாவ-யா

ஹயு-பிர மய்-ஏனை மையலோன் அந்த அரு ஞான
மாயா—வாயுவென் பரமனு யாதொன்று அன்னிய
சச்சிதா னந்த இன்பம், வீவ-யா தொரு—தானெ
வெளி-அங்கம் தந்தமளபருகிநெஞ உருத்தி ரன்மான்
விளம்பும்வா யாதொன்றின் அன்புறுகு செய்வான
செய் தூய்க்கு மவர் ரன்-கடபட, ஆவ—பேத ரும—
வான்மு வீணமிகுவி திறெனும் பேதமாம் தனை
தொரிடால்-அயல்-அன்பின் உலகி-அறை யம் சிதம்
ஆதலால் நாற்பத்தெட் டேபின் சதுவே

3 சது-வான்றெ தானேயுள் நாவரை இந்தியம்
தன்னில்-வாக் வாக்கு ஆன-தனக்கு-பிந் தாஞான
தர்க்க—நோக் குரு-விச்சை ஆதலான் ஆதல் வேறில்,
அது—ஓது இந்தப்ப இந்தவா தங்களி-தன் னில்—
ஒருகா தத்வ எப்ப—அன்னியமா பேதமும்
எப்பொருளு பெருமை—இது வே—ஜயன் உவமை
சாற்றி, புது-பரம சத-தேவ கல-திருவ இய-அனலர்
அத்தனங் அவன தியல்பை-புரந்தரன் அங்கவே
உமை-தன்னை அத்தன்-அன் றுமால்-சம்பு ஒழிவி
மொழியும், இது-ஓதி செப்பி-பர கதி-ஆதல் சாக்கி-பர

ஆரணந் தொல்லை நல்வி—ஈசனு ஒப்ப-சதுர் ஏறு-ஆ
தல்-நிதி சுரரிலுத் தமரே சாந்தோ

4. சாந்தோக்கி யம்ஜந்தா வதுஅர்த்தம மறை-யாதொன் மண்—உலக காரிய மெல்லாம் சத்தாயே காரண சத்தைதான் சத்தையில் லாத-கா ரணசத் தையே ஈந்து-சத் தாய்க்கொண்டே காரியம் இன்ன தோர் இதற்குநீர் கார ணத்தோ இரண்டுக்கும் உண்மையில் எல்லாவி காரணம ஆமென்மெற கூறும் பொருள் கூர்ந்து-அயல் பேதந்நெறி மண்ணும்வனே வனைகின்ற வன் தோன்ற லால சித்து காரணமே உண்மைசித் அறியாதார் அசத்துத்தன் அசத்கிய கண் அசத்தின் றன்சத், தாநது-அசத் துத்தன்சத பூதத்தால் எல்லாமுன் காலமுங்கன் பார்த்த பின்முன் தன்மாத்தி அறியாமை ஈசனும் அனலினில் ஆகித்தன் அறிவோ டு-அப.

5. அப-பூதம் ஊனிந்தி ஊானுகி கடையப்ப அன்னத்தா நிறை-தே கேந்தி-அப்போது ஆதலால் காண்பவன நீ யென்கி சொல்லிய உடம்பா தற்ப, துப-அதுவென் தத்துவம் இப்படியன் அறியாமை

நோக்குமிட பிரமா அறியா-தொன்றுகூட் உருவமா அன்னியத் பின்னமென் பாராத எல்லா மற்ற, பப-இப்ப கேட்பவன் இத்தாலி சுகமோடு எல்லாம் பொய் ஓது கின்ற-பரமாயுள் சாதனம் சகமோடுசி ஈசன்ச இத்தன்மை எப்ப டிப்பொ, சேப-யாதொ ருபடியில் யாதொரு படியினுல் எப்படிப் பூத போதம் சிவனிதுவா் எல்லாமு எப்பொருள் சகரூப ஆனதா பிறப்பி ஆகி

6. ஆதி-ஈ சன்றனருள் சுத்தமா சிவனேயுள் ஆதாரமு பத்த ராயுள் – அன்பராய் இவ்வணம் அப்பொழுது நீடொளி அளவிலா நித்த ராயுள், ஊதி-கடு கியுமுயர் வானவர் அன்பிலம் தலையினுல் ஓடி ஞர்சி - உவமையோ சத்தியம் உலகம்யா- அப்பாலா பூதமா கூறு மோசை நாதி-தோன் பாடும்- அள வை-தேவர் கரண–நா தம்–யாதொன் யாகின்- அகமெ-நானே–இப் பொருள்–பாச மோ–சாந்தம் உலகம்-தே வர்க்கு–மே லாய பேரா, யாதி-அரி யும்– அயனும் மாநுடர் தாஞகும் யாவனெரு அருளி ஞல் யா யாவரொரு வர்--தன்னி லே--எல்லாப் பொருட்குமேல் நூற்றுநாற் பத்துப் பாவே

7. பாவ—ஆ றவது சாங்தோக்ய தாற்பரியம் பங்கய புகல தெரிவி-பகா அறிவின் அளவில்-இல தெறு-மெய்யின் பொற்பொ-விதம் சுழுத்தி—இது பரம்ப ஆதல், தேவ-செப் பிய—தற்ப உடம்-அப்ப இ கதம-பின் னக-உளவா சிவனே பரையா-திவகரன் புரண- ஆ கம—நானும் எறிக-ஓ தலு-இதச திண்ணி தாக, காவ—பா முப்பதே ஏழாவ தாம்முண்ட கம்—ணீண்ட எப்பொ இங்கு-காண-சிலங் தியு-பன்னு யாது-அக் கர-கரும தொலே-சுருதி எங்கும் அங்கி, ஈவ-அர்க் சன்—மெய்ம்மை வரங்-மருவி அகக—தா ரம்-அரணி பரம்பொர்-இதயம இலங்க-ஓ ரொளி-இந்த தற்பரன் பன்று மறை திதமா-சின் மயமா-கும்மே,

8. கும்-பாவ உடம்—எப்ப சிவன்-வே தம்-வாக்கி அருளி—எத் தைப்பெ எண்ணி-கூ-அயர்ச் இப்பரம் அந்த—வீ டிலா-மிக்க சோகமோ அச்ச மாகி, மும்—பாக்கள் நாற்பதா றே-எட்டா வது-கைவல் லிய—அர்த்தம் நனிவே ஈசன்-முத்தியின் திரமாம தக்கஞா பத்திபால் உரியநால் தெரிவ ரியசிற், மம்-ஒழுங் ததொ-இன்ன தாக்கரும் உறங்குமவ் சொல்லிடும்

ஆத லால-மா லுரு புறங்கண்மூன் விழமிதா சிவனன் இந்தப்பு ஈன மாகி, செம-நீயென் ஆதரத் முகலுமூப் அனுவி னுக் கண் ணுஞ்செ ஒது வேதம்-சிறப்புடை எனையொழி கைவல்லிய பண்டைநான் முப்பதே கவிகள் ஒரே.

9. ஒர்-ஒன்ப தாவது பிரகதா ரணிய பொருள் துன்பமா ஈச னுக்கு-உயா -வேதி யார்-மத்த பின்ன- அல் லாமறை அத்துவித வேத மாக, ஊா-கிழமி உள்ளபே ஆதலால் வேதநூல் கனகமத பலவ தேசி- ஒழிவிலா இப்படி உரையாடு இருபதே மயித்ரேய பிராம ணார்த்தம், ஏா-பத்தா வது-பிரக தாரணிய அந்தர்யா மிப்ராம ணார்த்தம் நாத-எப்பொ-இத் தப்- உடம் வினவு-பா ரிலே-அந்தர் அரசாகி உருதகி ரவுல, மோா-உடைய காண்டல்-சித் தம பின்ன இது-தற்ப நிலே-பூத குறி-சத்தி வேள்-மெய்-மேவு மாயதே சிக-ஆதல் ஒருவரால் இருபத்து ஏழு கவியே.

10. கவி-பதிஒெ ராவது கடவல்லி சுவேதாசு வதர-உப நிஷத அர்த்தம்-கா பன்னு குகை-தருமா அந்தப்ப பொன்ற-அண் ணிய-நின் று இகழு, ஏய,

பிலி-தேசின் மோக-வருத் தம்பொருந் அருள-இந்
றியபுருடன் வாக்-ப ரப்பி-பேதம்-சுத் தப்ப-மூன்
றுமி-பர மிக-வன்னி எல்லாம்வ யாவன் இதுவ,
கலி-அரச எச்ச-உண் ஒருவர்-முப் பத்தொன்று
கடவல்லி பின்-அ தனெடு-சுவேதாசு வதரம்-வித்
தம-மெய்ய பெரியதா அறிவனு நாசம் ஈசன், அவி-
மேவி நீமரம் உலத்-ஆகு மிக்க சித் அரியமா பன்னி
ரண்டு-ஆகக்-கட வல்லி-சுவே தாசுவத ரம்மொத்தம்
நாற்பத்து மூன்று பன்னே.

11. பன்னிரண் டாவதுமுன் சொல்லிய உபநிஷ
தங்களின் மொத்த அர்த்தம்-பா-வகுத் பாடுகின்
மாசதில் பத்தியால் ஊனிலொரு செறிவா யெங்கும்,
அன-அடைய மாயையென் யாதொரு ஆகையால்
மெய்யைநா யாதொ ருபடி-அபபடி அம்பிகா
ஞானமா நேசநெஞ் தேசிகன் அருவெ னுமம, புன்-
உறுவ இந்தவி உண்டுபோற் காட்சியை வருபிறப்
பறவே எல்லாம்-போதவடி ஆதிவே தேவரும்
போற்றியே மாலுமவ் தெரியி லந்த, பின-அமையா
தொல்லைவே பரமமா பிரமனு மாலுமா உத்தம
இனி-பிரமகீ தைச் செய்யுள ஆகமொத் தம்பகரின்
ஐந்நூற்று நாற்பத் தேழே.

# பிரஹ்ம கீதை.

## பாயிரம்.

இரவியு மதியும் வானும் வாயுவு மனலு மப்பு,
முரவிய மண்ணு மற்றை யுணர்பவன் றானு மாகிப்,
பரவிடுங் கரணம் பன்னான் காயுமன் றாய நின்றே,
யுரைமன மிறந்து ளோங்கு மொளியினை வணங்கல்
செய்வாம். 1

கண்முதற் புலன்க ளந்தக் கரணங்கள் விளங்கு
மெத்தாற், றண்மதி யருக்க னங்கி தாரகை விளங்கு
மெத்தல், விண்முதற் பூத மியாவும் விளங்கிடு
மெத்தா லந்த, வுண்மையைச் சிவப்பிர காச வொளி
யினை யுளத்துள் வைப்பாம். 2

முன்னைநற் சுருதி யோதி முடிவுறற் கரியதாக,
வின்னமத் தேவர் மூவ ரெய்துதற் கிடரே மேவத்,
தன்னையிப் படியே காணத் தாளளித் தெனக்கோர்
வார்த்தை, சொன்ன நற் சொரூபா னந்தச் சோதி
யைத் தொழுதல் செய்வாம். 3

நித்த னிர்க்குண னிமல னிடொளிச்
சுத்த னேகஸ்சு ருதித்தொ டர்பிலா
னத்த னென்னையு மாண்டவ ருளினன்
றத்து வன்றிருத் தாளைவ ணங்குவாம். 4

மயலில் வானவர் கேட்பம யக்கற
வயன்மு ரைட்சொன வாரணத் துட்பொரு
ளியலு மாசொரு பாஙந்தச் சித்தியென்
பெயரி னற்றமி ழாலிஙகுப் பேசுவாம் 5

தானு காதி யாவையுமாந் தன்மைத் தாய வொரு பொருளை, யூறு மென்றன் வாக்கதனு லுண்மை யறிய வுரைத்திடுதன், மாஙா கந்தான் மலர்தலையில் வையந் தரிப்ப மற்றதுபோற், பூஙா கந்தான் பொறுப்பனெனும் புன்சொற் போலும் புகலுங் கால். 6

மன்னிய கமலத் தோன்றுள் வானவர் வணங்கி யெல்லாம், பன்னரு மறைய ருத்தம் பகரென வினவு மாறு, முன்னதின் மொழிந்து பின்னர் முளரியந் தவிசிய் மேலோ, னின்னிய லிருக்கி லைத ரேய்ம

நியம்பு மாறும். 7

வான்முன் முதலா மனைத்துலகும் வானோர் முதலாம் வருபிறப்பு, மீன்மு விருக்கிற் றைத்திரிய மியம்பும் பரிசை யியம்புவார், மூன்று மோத்தி லுரைததாதி மூலப் பிரமங் கலைத தேடச, சான்றோர் சொன்ன நெறியைவிடாச் சதுர்த தத் தாலே சாற்றியபின். 8

சந்தோ கத்திற் சட்டந்தா றுரைக்கும பரிசைச் சதுர்முகத்தோ, னோந்தா மோத்தி லுரைத்தா றி லேழு மெட்டு மாங்கறைந்தான், மைந்தார் முண்டங் கைவலிய மறையின் பொருளை யவயமெலாங், தந்தான் சத்த மத்தாலு மட்ட மத்துஞ் சாற்றிப பின 9

அன்பினு லகில லோகம் படைத்தவ ாமரர் தங்கட், கின்பமா ரனுபி ரகதா ரணத்திசை மயித்தி யத்தை, யொனபதா லுரைத்துப் பத்தா லுடத்த முங காக்கி தானும், பின்பதா யத்த ரியாமப் பிரமண விடயம் பேசி. 10

தாதா வோகா தசந்தன்னிற் றகவோர் சொல்லுங்
கடவல்லி சுவேதா சுவதர மெடுத்து ரைத்துச்
சொன்ன தெல்லாந் தொகுத்தொன் ருய்த், தூய்தா
பருளிச் செய்தத்தி விரா ரேத்தாற் சொல்லின்பப்,
போதா லயத்தோன் புகன்றபொரு ளியானுந்
தமிழாற் புகல்கின்றேன் 11

பாயிரம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - 11

---



# பிரஹ்ம ஸ்துதி.

## 1. தேவாகள் பிரஹ்மாவைத் தரிசித்து வேதார்த்தம் வினவும் அததியாயம.

---

சூதனு முனியை நோக்கித் தொல்லைமா முனிவர் சொல்வார், மாதவ! வினவிற் றெல்லாம் வகுத்துநீ தொகுத்துச் சொன்னு, யாதி நான் முகத்தோன் கீதை யறியலா தரித்தோ மின்றன், ஞேதிமா முனிக ளெல்லா மீளவு முரைக்க லுற்ருர் 1

வேதநூ றெறிந்தோ ஞலே விஞ்சையும் விளங்கப் பெற்ருூ, யாதலா லியாது முன்னு லறியலா காத தில்லை, மேதையான் மிக்கா யெங்கண் மேலுனக் கன்புண் டாகி, லோது வாய் போதோன் சொன்ன வுபநிடப் பொருளை யென்ருர். 2

இன்ன பரிசை முனிவரெல்லா மியம்பக் கேட்டங் கிமையவர்கண், முன்ன மொருநான் மறையோதி முடிந்த பொருளோர்ந் துணராம, லன்ன மிசையோன் றனைக்கேட்ப வண்டத் தவர்கட்

கவனருளாற், சொன்ன பரிசைக் கேளுமெனச் சூதன்
சொல்லத் தொடங்கினனால் 3

பண்டொரு கற்பந் தன்னிற் பழமறைப்
பொருளை யெல்லா, வண்டருங் கூடி யாய்ந்தங
கறியலா காமை யாலே, யெண்டரு மாதவத்தை
யெய்தியே யிதனைக் கேட்பப், புண்டரீ கத்தில்
வாழும் புனிதனை நோக்கிப் போனார் 4

பாவலே ரறுக்குந் தீர்த்தமென் றெண்ணப்
பட்டன யாவையும் பரப்பித், தேவரோ டியக்க
ரரக்கர்கந் தருவர் சித்தர்சாத் தியர்களுஞ் செறிந்து,
நாவினு லறியு மறுவகைப் பட்ட விரதமு நலம்பெற
வுடைத்தா, யோவிலா தொழுகு மருவிக ளுடைத்தா
யொருபொரு ளொழிவற வுடைத்தாய். 5

சகல யோகிகளு மேவவினி தான தனிசேர்
குகைகள் கோடிபல கூடியுள கோடி பலவாஞ்
சிகர மேவுநவ மாமணிகள் சிந்தி யுளதாய்
நிகரி லாமனிகழ் மேருகிரி நீண்மு டியின்மேல். 6

ஐம்பதிற் றிரட்டி யோசனை நீளத் தைம்பதிற்

திரட்டியே யகன்று, கம்பநற் கரியை முதல்வரு மிருகக் கணங்களா லாகுலங் கனத்துச், செம்பொருள் கொழிக்குந் தீர்த்திகை யுடைத்தாய்த் திரண்டபுள் ளினங்களு முடைத்தாய்ப், பைம்பொழிற் செழுந்தே னருந்திய வறுகாற் பறவையி னொலியினுற் பரப்பி. 7

இந்து பாநுவென் றிருவரு நிலவினே டிள வெயிற் பரிப்பக், கொந்து பாய்தரு சோலையின் கிழங்குகாய் கொழுங்கனி வழங்கத்தண், சந்த நாடவி புகுந்துவண் டுலவுதண் டாமரைத் தடந்தோய்ந்து, மந்த மாருதந் திரிதரு பிரமமா வநமுள ததன் கண்ணே . 8

வளமாமதி லொன்பதோ டெண்பது வாசலாகி, யிளநாயிறு போலவி ளங்கியி லங்குமொள்வாள், வளைநேமிகொ டுஞ்சிலை தண்டும முக்கள்வல்லோ, ரளவோ தவி லாதவர் காப்புடைத் தாகியெங்கும். 9

பூரண கும்ப மெங்கணு நிறைத்துப் பொன் றிகழ் நித்திலம புணர்ந்த, தோரண முயர்த்துத் தூய்மலர் துதைந்த சுகந்தமா லைகள்பல தூக்கி,

யேரணி நீப மேற்றியெம் மருங்கு மேழிசை யாழி லெங் கெங்கும். வாரணி கொங்கை மடந்தையர் பாடு மாடமா ளிகைவரம் பிலதாய் 10

சித்திர மமைத்த பித்திகோ டிகளாற் சீர்பெற விளங்கிமா ணிக்க, வுத்திரம் வயிரப் போதிகை பவள வொளிமணித் தூணிரை பொதிந்து, நித்திலத் தாம மெங்கணுந் தூக்கி நித்தில விதானமே யெங்கும், வித்தரித் தோங்கி வியனெடுங் கொடிகள் விண்ணள வெறிந்துமீண் டுளதாய். 11

வெடிபட வுச்ச மந்தமத் திமமாய் விளங்குகா ளவொலி யொருசா, ரிடிபடு முரச முழக்கொலி யொருசா ரியம்புவாச் சியவொலி யொருசார், வடிவுடை மகளிர் கூத்தொலி யொருசார் மறையவ ரோத்தொலி யொருசார், முடிவறு மிருதி புராணவா கமங்கண் மொகுமொகென் றெழுமொலி யொருசார்.

மேவிய சகலா கமங்களின் பொருளும் விருப்புட னுப்பவ ரொருசார், காவிய மென்னும் கனியினை நுகர்ந்து களித்திடு முளத்தவ ரொருசா, ராவியோ

டாக்கை யுறவறி விருநா லங்கத் துயோகிய ரொருசார்,
ரோவியம் போல விருந்துணர் விறந்த வுணர்வு
கொண் டுறங்கின ரொருசார் 13

மத்தநற் களிறும் வயிரநற் றேரும் வாசியும்
வரம்பில தாகி, யத்திரத் தாலுஞ் சத்திரத் தாலு
மளவறு வீ ர ர் கா ப் புடைத்தாய், மெய்த்தவர்க்
கெளிதா யல்லவர்க் கரிதாய் வேண்டிய பொருளெலா
மீ ண் டி . யித்தகைத் தான விடத்திலா யிரக்கா
லிலங்கிய விர த்நமண் டபத்தே 14

கற்பக தருவு மகரதோ ரணமுங் கவின்பெற
வமைத்துள தாகி, யற்புத மான வரிமுகத் தறுகா
லாசநத் தம்பஞ்சி யணைமேற், சொற்பத வடிவாந்
தோகையோ டெல்லாப் பொருளுமாய் விளங்கிய
தோன்ற, லுற்பவ ம றுப் பா ளுகவீற் றிருந்தா
னும்பருங் கோயிலுட் புகுந்தார். 15

ஆரமணி குண்டலமொ டாழிகட கங்கே
யூரமபி டேகமுத லொப்பனைக ளுஞ்செய்
தாரமகி ழுபிபனி நீரொடள வுங்கர்ப்
பூரமது கொண்டுதிரு மேனிநனி பூசி. 16

நித்த மானதன் னொளியி னலணைத்தையு நிகழ்த்துநின் மலனேடை, வைத்த செம்பொ னிற்றிகழ் திரு மேனியின் மாலிகை பலசாத்தி, யுத்த ரீகம்வெண் ணெக்னோ பந்திக முதரபந் தநத்தோடு, சுத்த மானவெண் கலிங்கமுஞ் சாத்திநற் சுராசுரர் தொழுதேத்த. 17

தமத்தை யப்புறங் கடந்துநின் றறிவுறு சான்ற தாய் மதனெல்லா, மமைத்தொ ருத்தரா லமைத் திடப் படாதுள வமலனை யிருப்பாளை, யிமைத்தி டப்படா விழியினை லிமையவ ரியாவருங் கண்டிந்தச், சுமைக்கி லைத்தன மென்பவர் போலவன் றுணையடி தனில்வீழ்ந்தார். 18

கஞ்ச நற்கழல் பணிந்தம லணைமிகக் கண்டுகண் களிகூர்ந்து, மஞ்சே னச்சொரி தரமயிர்ப் புளகிதம் வரமகிழ்ச் சியினேடு, நெஞ்ச நெக்குக நிமலரா யவாவெலா நீங்கிநீண் முடிமேலே, யஞ்ச லிததகை யினர்களா யாநந்த வாரியிற் படிந்தாடி. 19

அழுத்த மிக்கதி பத்தி யாலவ சத்த ராயுள

வண்டர்தங், குழுப்பு விக்கண்வி ழுந்து மீளவே ழுந்து தங்கள்கு ரல்களுந், தழுத்த ழுத்தெம துற்ப வங்கட விர்க்கை யேதக வென்றுதாம், வழுத்த வுற்றனர் வல்ல வாமறை சொன்ன வாறுதம் வாய்மையால். 20

பரம ஞானமாம் பாற்கடல் பண்ணிய பரமனே யடியோற்றி, கரத லாமல கத்தினேர் பரவொளி காட்டிடுங் கழல்போற்றி, யொருப ராபர மன்றிநீ யொருவனு மாகிய வொளி போற்றி, பிரம நாரண சங்கர போற்றியெம் பெருமநின் பதம் போற்றி. 21

அடைய நீயறிந் தொருவரா லுன்னையிங் கறிவரி யாய்போற்றி, தொடைய தாமுல கனைத்தையுந் தரித்தொரு துவக்கறு சுடர் போற்றி, முடிவு மாதி யுங் கண்டுநீ முதன்முடி வின்றிய முதல்போற்றி, வடிவி யாவையு முடையையா யுனக்கொரு வடிவிலா தாய்போற்றி. 22

அகில மாயகி லத்தினுக் கதிபனு யகிலமு மொன்றின்றி, நிகழு ஞானமா நிமலனே போற்றிநீ

நினைத்திடு மிடமெல்லா, முகம தாயொரு முகமுனக் கின்றி யே யிருக்குநான் முகபோற்றி, திகழு முன்னொளி யாற்றிகழ்ந் திலங்கிய சின்மய வொளிபோற்றி. 23

வேத மோதிய விமலனே போற்றிவே தாந்த மெய்ப் பொருள்போற்றி, காது மாபிற விக்கடல் கடத்துநின் கழலிணைப் புணைபோற்றி, சாத லான தும் பிறப்புமற் றிருந்துள சம்புவே கழல்போற்றி, பேத மாயினும் போற்றியோ ராவிலா வின்பமே கழல்போற்றி 24

தோத்தி ரஞ்செயப் படுபவ னுகியத் தோத்திரந் தானுகி, யேத்தி நிற்பவ னுகியே யிருந்துள விறை வனே கழல்போற்றி. காத்தி ரந்தனை யெடாவகை மெய்யினைக் காணவே நினைவோர்க்கு, நேத்தி ரங் கொடுத் தருளியங் கவர் துயர் நீக்குநின் மலபோற்றி.

ஈசனுக் கன்ப ரானர்க் கன்பனு மிறைவ போற்றி நாசமற் றிடுப்பாய் போற்றி நாரணற் கினியாய் போற்றி, யாசையற் றவர்க்கு ஞான மருளுவாய் போற்றி யல்லாப், பாசமுற் றவரை வெய்ய பவத்

திடும் பகைவ போற்றி　　26

அண்டருக் கதிப ராலு மறிந்திடற் கரியாய் போற்றி பண்டுடைப் புவந மெல்லாம் படைத்திடும் பரனே போற்றி, கண்டிடப் படாதே யெல்லாங் கண்டிருக் கின்றாய் போற்றி. புண்டரீ கத்தில் வாழும் புனிதனே போற்றி போற்றி　　27

பத்தியா லிமையோ ரிங்ஙன் பங்கயத் தவனைப் போற்றிச் சுத்தவே தங்க ளோதித் துணிந்தமெய்ப் பொருளை யெங்கட், கத்தனே யருள்செய் கென்ன வவர்களா தரத்தைக் கண்டே புத்தியாற் போதோ னுண்மைப் பொருளையே புகல லுற்றான்.　　28

1-தேவர்கள் பிரஹ்மாவைத் தரிசித்து
வேதார்த்தம் வினவும் அத்தியாய முற்றிற்று.
ஆகச் செய்யுள் - 39



## வேதார்த்த விசாரம்.

## 2. ஐதரேய உபநிஷதார்த்தத்தை உரைக்கும் அத்தியாயம்.

---

*மறைகளோதுபொரு டன்னை யெவ்வழியி னுலு மெக்கலையும் வல்லரா, மறிஞ ராலுமறை யப்ப டாதறிய வாத ரிக்குமிகு மன்பினீர், செறித லாலதனை நான்வி ளங்கவுரை செய்ய வொன்றுபடு சிந்தையா, னெறிய தாகவிது கேண்மி னென்றயனு நேர்மை யானபொரு ளோதுவான்* 1

*சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வா னியாதுக்கு, முன்மாத் திரமும் வேறில்லை முற்று மவனே மொழிவுற்ற, நன்மாத் திரமா யாங்மாவென் றுரைக்கு நாமத் தினையுடையான், றன்மாத் திரமே யாகியவத் தன்மை யான சங்கரன்றான்* 2

*அந்தத்தள தன்சத்தியை யடைவுற்றுள தாமிச், செந்துக்கள்செய் கருமந்திகழ் காலம்பரு வஞ்செய் தெந்தப்பொருள் களுமாக்குவ னெனவே யிறை யுன்னுப், பந்தப்பட முன்போற்பல வுலகங் கள்ப டைத்தான்.* 3

பரமன்செய லறியாதுப டைத்தானுல கெல்லா, மரனென்பவ ரரியென்பவ ரயனென்பவர் சிலரிங், திரனென்பவன் முதற்றேவர்கள் செயலென்பவுஞ் சடமா, மருவுங்குண வடிவென்பவ ரணுவென்பவர் மயலால். 4

வானிலா வோசையென்பர் வந்தொரு கணத்திற் றேன்றி, யானியாம் புந்தி யென்பா ரடையவுங் கெட்டு நின்ற, சூநிய மென்பார் பூதத் தொழிலெனச் சொல்லா நிற்பா, ரானவா றுருவ ராலன் றடையவு மியல்பே யென்பார் 5

தத்தமா லான பெத்தவா தியர்தாங் தங்களிற் றுங்கடர்க் கங்கள், கத்திடா நிற்கும் பரிசெலாஞ் சுருதி மிருதிகள் கருதிய தழிக்குஞ், சுத்தமா விருத்த மாகுமென் றேயென் றுணிவுதொல் பிறவியிற் சுழல் வார், சித்தமா னதுபோ யிவற்றிலே காதல் செய்யு முன் செய்தகீ வினையால். 6

காதலாற் றத்தங் கடவுள ரருளாற் காலபா கத்தினு லறத்தாற், போதரா தலினுல் வேதவா

தத்தைப் பொருந்தவர் புகன்றவவ் வடைவே,
வேதாவா தத்தை மேவுநல் வினையால் விருப்பினு
ளன்றிமே வினருஞ், சாதலா னதுவும் பிறத்தலு
மில்லாத் தற்பதந் தன்னையே சார்வார். 7

வான்கரு தியமறை வழியை விட்டுமேற்
முன்கரு துதல்சது ரன்று தன்கையிற்
றேன்கமழ் திரளையைச் சிங்கிச் சந்தியாக்
கூன்கையில் விழுந்துளி கொண்ட தன்மையே. 8

பொருள்கொண்ட மறைநின்று புகல்கின்ற
துணரா, மருளகொண்ட சமயங்கண் மதிகொண்டு
கதியா, யருள்கொண்ட பரவின்ப மடைகின்ற
வவர்போ, லிருள்கொண்டு பொருள்கண்ட வவரன்றி
யிலரார். 9

வேதமோ தியதே மெய்ப்பொருண் மற்றைப்
பொருளெலா மித்தையே வேத, மோதமே வுற்ற
பொருளிரு வகையா மதனிலொன் றென்றுமுண்
மையதாய்ப், போதவா நந்த மாகிய சிவனும்

பொருளது மற்றதப் பொருளி, லேதமே வாமற்
கற்பித மாகு மற்றத னியல்பையு மிசைப்பாம் 10

சொல்லுறு நின்ற கற்பிதப் பொருளிற் சொல்லள வுள்ளதா யுண்மைக் கில்லையா யிருக்குஞ் சில பொருள சொலவு மில்லையாஞ் சிலபொரு ளவைதா, னெல்லைதீர் வானு நிகளுஞ்சுத் திகையி லிரசதா திகளுமா முன்னைத், தொல்லையாம் பொருளுங் கற்பிதத் தண்மைப் பொருளையுஞ் சொல்லுநற் சுருதி. 11

கனவிற் கற்பிதப் பொருள்போல் வாதக் கலக்கங்க, ளனவிற் கற்பிதப் பொருளை நவிலா ரினியச்சிற், கனவத் துவிதத் தினையென் கண்ணுற் றவர்கண்ணுற், சொனவத் தகமு மெய்யே மெய்யிற் றென்றுதே 12

போதக் கண்ணிற் பூதம் பொய்யே மெய் யேயாம், பேதக் கடகுட் டியமா நிகழ்விற் பேதந்தா, னோதப் படுசுத் திகைவெள் ளியின்மெய் யுணர்

காலந், சேதப் படுமக் கனவிற் பெரிதும் திட முண்டோ. 13

கனவிற் கண்ட பொருணனவிற் காணும் பொருளைக் காட்டலா, னினையிற் சமய நெறிவேத நெறிக்கு நிமித்த மாகினமின், வினவிற் சமய வெறி விட்டு மேலாம் வேத நெறிநின்றோன் பினையச் சமயத் தவர்க்குறுகிற் பிராயச் சித்தஞ் செய வேண்டும். 14

தண்ணிய சமயிக டங்கள் பந்தியி
லுண்ணுத லவங்களோ டுறவு பண்ணுதல்
புண்ணிய மறிந்திடப் புகுதல் செய்திடிற்
பண்ணுக சாந்திரா யணம்ப கர்ந்தவா 15

வேதஞ்சொன படியொழிய வேறுஞ்சில கலை களினை, யோதுந்திற மருவிமறை யோதுஞ்சிவ னிருகமலப், பாதந்தொழ நினைவிலர்கள் பாசண்டிக ளௌவறிக, தீதொன்றிய வவர்களொடு சேருங்கலர் களுமவர்கள். 16

*மையறு வேத மார்க்க மறந்துபா சண்ட மார்க்கக், கையரான் மயக்கப் பட்டுக் கலியுகந் தன்னி லுள்ளோர், மெய்யுணர் வநந்தா நந்த மேனியாஞ் சிவனைப் பூசை, செய்யவா தரியார் செய்வார் தம்மையுஞ் செய்ய வொட்டார்.* 17

*காதும்வா தியர்க ளாலே கலியுகத் துள்ளோர் கெட்டு, வேதமோ தியவா செய்யார் மிருதிசொல் லுவதுஞ் செய்யார் பூதியு மணியார் ஞாந சாதந பூத மாக, வோதுவ தொன்றுஞ் செய்யா ரொழிந்ததே யுகந்து செய்வார்.* 18

*தருமம தறிவில்பா சண்டர் தங்களை*
*மருவலால் வேதமா வாக்கி யப்பொருள்*
*கருதிடா ரதுகர மணியிற் காட்டிடுங்*
*குருவையும் வழிபடார் குதர்க்க மேவலார்.* 19

*முன்னைநான் மறைக ளோதி முடிந்திடும் பரம மான, சந்நியா சத்தைச் சாரார் சார்ந்தவா தமக்குந் தீங்கு, பன்னிடா நிற்பர் வேறு பலபல சொல்லி யென்னை, மன்னுவீ டெய்தா தான வழிகளே மருவா நிற்பர்.* 20

தட்டரா மார்க்கர் நூலிற் றுவக்குறைப் பெரிய ராகிச், சிட்டராய்த் தீர ராகிச சிவனரு ளுடைய ராளுர் கட்டமாம் பிறவி தீரக் காதலால் வேதஞ் சொல்லப், பட்டதே செய்யா நிற்பார் பரமமாம் பதத்தை யுன்னி. 21

அவத்த மேபிதற் றப்படும் கஃபெலா மல்லற் பவத்தை வேரறுத் திடுவது பழமறைப் பொருளே, யவப்பி ளுலொரு கணத்திலப் பொருள்பெற வுரைப் பான். சிவப்பிர காசனே யென்றனன் றிசைமுகன் றெளிய. 22

2-ஐதரேய உபநிஷதார்த்தத்தை

உரைக்கும் அத்தியாய முற்றிற்று.

ஆகச் செய்யுள் - 61.

## சாக்ஷி சிவ ஸ்வரூபம்.

## 3. ஐதரேய உபநிஷதார்த்த சேஷமும், தைத்திரீய உபநிஷதார்த்தமும், உரைக்கும் அத்தியாயம்.

---

*தற்ப ரன்றனு ருவுஞ்ச யம்புவா*
*முற்ப வமது ருவையு முண்மையி*
*லற்ப முமதி லங்கிய மின்மையும்*
*பொற்ப மைந்தநற் பூமக ளேதுவான்.* 1

*சான்றதே யெல்லாப் பொருட்குமேல் லாமாஞ் சங்கரன் சான்றிலா தாயிற், றேன்றிடா துலகந் தோன்றிடா வாறு தனக்கெனத் தோற்றமின் மையினுற், றுன்றனக் குலகந் தோற்றமில் லாமை சடத்துவத் தாற்சடமாகை, யேன்றுதா னறியா தொன்றினு லறியப் படும்பொரு ளாகிய வியல்பால்.*

*உலகெலாம் விளக்க முறுமொளி யுணர்வி லுற்பவ மெனச்சிலர் சொல்வ, துலகில்பே ரொளி தான் பிறக்குமேற் சடமா மாதலாற் பிறக்கைகூ டாது, கலவரு நாச முள்ளது சடங்க ளாஙகடா*

திகடமக் கேயா, முலைவிலா வொளிவிஞ் ஞாநமுண்டாக வாக்குகை யுள்ளவா றன்றே 3

பாந ரூபத் தான்ஞாநம் பரிணா மத்தை யடையாது, ஞாந ரூப மவிகாரி யாத லாலே விஞ்ஞாநந், தானும் விகாரப் படுமேற்பா றன்னை முதலாஞ் சடப்பொருள்போ, லாகி யாகி யறிபொருளா மறிவு மறியும் பொருளாமோ. 4

அறிவு பாநந் தனக்குத்தா ரைம் பழமாகக் கூடா, தறிவு தானே ரறியவுறும் பொருளாயிராதவதனுலு, மறிவைக் குணமா கப்பிறரு மங்கீ கரித்தவதனுலு, மறிவிங் கசத்தாம் பாநத்துக் காரம் பகமுமாகாதே. 5

தொல்லை யசத்தாம் பாநத்தைத் தோற்று விப்பதொருஞான்று, மில்லை யில்லாப் பொருளுக்குப் பண்டின் றென்ன வியம்பவருஞ், சொல்லு மில்லையாதலிறுற் றேற்றப் படுதல் விஞ்ஞாநத், தில்லையெல்லாப் படியானு மென்று முள்ள திவ்வொளிதான். 6

ஓதுநெறி யாலுணர்வு முற்பவமு முதே
பேதைமைப தேயதுபி றக்குமெனு மாறிங்
கோதிவரு பாநமதி லுற்பவமு மற்றே
நீதிபிற வாமலுள தாலவ்வொளி நித்தம் 7

நிகில லோகந் தனைநிகழ்த்து நித்த வொளியே யவ்வொளியே, சகல லோகந் தனக்கென்றுஞ் சான்றாய் நின்ற சங்கரன்றான், றுகளி லிறையிற் கற்பிதமாஞ் சமபந் தத்தாற் றோற்றமுறுந், தகவி லஞ்ஞா நமுமனறித் தானுய்த் தோற்றந் தாராதால்.

தெரிவி லாமையிற் சனித்திடுஞ் சித்தமுஞ் செற்ற மார் வமுமெல்லாந். தெரிவி லாமையைத் திகழ்த்திய சேதநச் செறிவினுற் றிகழ்கின்ற, புரிவ தாம்பிரா ணன்றிகழ் வதும்புறக் கரணங்க ளுடலந்தான், விரிவ தாம்விட யங்களெல் லாஞ்சித்த விருத்திசே ருணர்வாலே. 9

அன்றியது மாநமுத றன்னிலறி யறிவு, நின்று சில சில்பொருணி கழ்த்தியிடு மதனு, லென்றுமிறை

யெப்பொருள்க ளியாவுநிகழ் விப்பா ஞென்றுமவ
ஞலொழிய வென்றுநிக ழாதால் 10

ஆதலா லுருவங் காண்பது மொலிதா னழகுறக்
கேட்பது மொருவன், காதலாற் கந்தங் கொளவது
மினிதின் ஞெதென விரதங்காண் பதுவு மோதலாம்
பரிச முணர்வது மிறையா லுரைத்தசங் கரனெனு
முணர்வை, மேதையான் மிகுத்தோர் வேறுவே ருக
விளம்புவா ரதுவிளம் பிடுவாம். 11

சிலவர்தா மிதய மென்பர்கண் மநமே யென்
பர்கள் சிலவர்தாஞ் சிலவர், நலமதா ஞாந மென்பர்க
ளெல்லா நாடிடு ஞாநமென் பர்களா, மிலகுவிஞ்
ஞாந மென்பர்கண் மிகுத்தே யிலங்கிய ஞாநமென்
பர்களாஞ், சொலவரு மேதை யென்பர்கள் வேறு
சொல்லிடும் பரிசையுங் கேண்மோ. 12

யாதையுங் காணுங் கண்ணென மொழிவா
ரெழின்மிகு திருதியா மென்பார், சூதிய தென்பார்
மிருதியென் றுரைப்பார் சொல்லுஞ்சங் கற்பமென்
றுரைப்பார், நீதியாங் கிருது காமமே யென்பார்

நிகழ்வுறு வசமென வுரைப்பா, ரோதிய விந்த
நாமதே யங்க ளுணர்வதாஞ் சிவனுடை யியல்பே

பிரம னிவனே யிந்திரனும் பிரசா பதியு மிவ
னிவனே, யுரம துடைய வும்பர்கள்பூ தங்க ளுலகங்
களுமெல்லா, முரைசெய் திடுமண் டசமுதலா
மியோநி பேதங் களுமிவனே, குரக தங்கோ மாநு
டருங் குஞ்ச ராதி களுமிவனே. 14

ஏனை மற்று மியம்பாத வியங்க நிற்கப் படு
வவெலா, ஞான கநமா மிறையவனே நலமாஞ் சிவனு
மரனுமுத, லான நாமங் களையுடைய யாவு மறிவு
மெய்ப்பரம, னீன மில்லா வறிவுருவே யெல்லாப்
பொருட்கு மிறைபேரும். 15

மையலொன் றறவிவ் வறிவினை யறியின் மாநு
டன் முத்தனு மன்றித், துய்யகன் மத்தான் மைந்த
ரான் மற்றுேர் பொருளினு லுற்பவந் துடையான்,
வையகம் பிரம வேதநந் தன்னின் மாத்திரத் தாற்பிர
மந்தா, னையமொன் றறவே யாமென முக்கா லானை
யிட் டறைந்தன னலரோன். 16

ஐதரேய சேஷ முற்றிற்று.

## தைத்திரீய உபநிஷதார்த்தம ஆரம்பம்.

*அந்தவிச் சைக்கு விடயமாஞ் சச்சி தாநந்த மாம்பிர மத்தைப், பந்தமாந குகையின் மாயையஞ் ஞாந மென்பதிற் பரவியோ மத்தி லந்தவங் கத்துப் பிரமரூ பத்தை யறிந்தவ னவனொரு காலே, சிந்தை செய் காம மியாவையும் பெற்றுத் திரவே சீவந்முத் தனுமாம்.* 17

*அஞ்ஞாந மாயா சத்திக்குச் சானறு யகத்துறை யசலவாந் மாவை, மெய்ஞ்ஞாநப் பரத்தில் வேறறக் காணு மவன்பிர்ம பீசனின் மிக்கான், மெய்ஞ்ஞாநப் பரத்தில் வேறறுஞ சத்தி மிசசிர மித்தவாந் மாவிற், பைஞஞாக மாஙே போலவே தோன்றப் படுமபஞ் சீகரித் துளவான்.* 18

*வாயு வென்று பெயருடைய பரிசம் வாநத் துண்டாயத், தேயு வதிலே தோன்றிற்றவ் வநலி லப்பு முண்டாடத், தோய மதனி லவநியாய்ச் சூக்க மைந்தும் பஞ்சிகரித், தூய விறைவ ஞக்சிஙயாற் றூல பஞ்ச பூதமுமாம* 19

பரமனுக் கினையி னுலே பஞ்சபூ தங்க ளாலே, பிரமாண்டம் படைத்தே னந்தப் பிரமாண்ட மத்தி னுள்ளே, நிரமுறு முலதந் தேவ சாதியுந் தாந்தாம் பண்ணுங் கருமரூ பததால் வாங வாதியும பிறவும் கண்டேன் 20

யாதொன் றெலும்பு நரமபுமுத லிந்த வுடம்ப தந்மய, ஞேது பிராண மயனத்துக் குளளாய் வேறு யேயொளிரு, மோது பிராண மயற்கயலா யுள்ளா யொளிரு மனோமயனன், விதி யுறவிஞ் ஞாநமய னவனுக் குளளாய் நிகழுமால். 21

அன்னியமாய் விஞ்ஞாந மயனுக் குளளா மாநந்த மயனந்த மயனற னுள்ளாய், மன்னிடவப் பிராணமய னுலே பூர்ணன மனோமயனுற் பூர்ணன் மனோம யன்று, னன்னவகை விஞ்ஞாந மயனாற் பூர்ண னுநந்த மயனுலே யவன்றன் பூர்ணன, றன்னிகரற் றனைத்தினுக்கு முளளாய் வேறுந் தற்பரத்தாற் பூர்ணனது தானே பூர்ணம் 22

சச்சி தாநந்த மாகியொன் றும்பரப் பிரம.

